# குமரிமலர்





பதிப்பாசிரியர்

ஏ.கே.செட்டியார்

மலர் 30

## உள்ளுறை

இதழ் 10

பிரமாதீச — தை


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | பல்சுவை | .. 9 |
| 2. | பூலோக கற்பக விருக்ஷம் | .. 17 |
| 3. | தமிழ் சிவசங்கரப் பிள்ளை | .. 19 |
| 4. | காஞ்சிபுரம் விவசாயக் கண்காக்ஷி | .. 25 |
| 5. | மகாமேரு யாத்திரை | .. 32 |
| 6. | கர்மவீரர் கென்னடி | .. 40 |
| 7. | கொய்த மலர்கள் | .. 51 |


JANUARY 1974

## யார் காப்பாற்றுவார் ?

முகம்மது நபி அவர்கள் தன்னந்தனியாக இருந்தார். அவருடைய போதனைகளை வெறுத்து வந்த ஒருவன் கத்தியும் கையுமாக அவர் முன்பு நின்ருன்.

“உங்களைக் கொல்லப் போகிறேன். இப்போது உங்களைப் பாதுகாப்பவர் யார்?” என்று கேட்டான்.

நபிகள் நாயகம் சற்றும் அஞ்சவில்லை. “குதா! (கடவுள்)” என்று கணீரெனப் பதில் கொடுத்தார்.

கடவுள் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் கொலைகாரன் வெலவெலத்துப் போனுன். அவனிடமிருந்து கத்தியை நபிகள் பிடுங்கி அதை அவன் மேல் ஓங்கினுர்.

“இப்போது உன்னைப் பாதுகாக்கப் போவது யார் சொல்” என்று மிரட்டினுர்.

அவனுக்குக் குலை நடுக்கம் கண்டது. நபிகளைப் பணிந்து “தாங்கள்தான் காப்பாற்ற வேண்டும்” என்று கெஞ்சினுன்.

நபிகள் வெறுப்புடன் கத்தியை வீசி எறிந்தார். “அட பாவி? சாகும்போது கூடக் கடவுளை நினையாமல், கேவலம் அச்சத்தினுல் ஒரு மனிதன் காலடியில் விழுகிருயே! அதுவும் நான் வழிகாட்டிய பிறகு!” என்ருர்.

இந்த விதமாகத் தன்னைக் கொல்ல வந்தவனை ஒரு பெரிய கடவுள் பக்தனாக மாற்றிவிட்டார் நபிகள் நாயகம்.

ஃ

## புதுச்சேரியில் தமிழன் வீட்டுக்குள் நுழைந்த வெள்ளைக்காரன் (1746)

இந்த நாள் வெள்ளிக்கிழமை (புதுச்சேரி) பட்டணத்திலே நடந்த அதிசயம் என்னவென்றால்:

முசே கொக்கேத் என்கிறவர் சுமார் ஷாம் நொத்தேராயிருக்கிறவன் நேற்றைய தினம் சாயங் காலமான ஏழு மணிக்கு வீட்டிலிருந்து புறப்பட்டு மீராப் பள்ளியிலே யிருக்கிற முசே பாஸ்க்கு (M. BAS-QUe) தோட்டத்துக்குப் போய் சாராயம் குடித்து அவ்விடத்திலே யிருந்து மறுபடி வீட்டுக்குப் போகிறவன் அந்தத் தெருவிலே ஒரு வீட்டிற்குள்ளே புகுந்து பெண்டுகளிருக்கிறார்களோ வென்று பார்க்கிற போது இருட்டாயிருந்ததினாலே அடுப்பிலேயிருந்த கொள்ளியை எடுத்துக்கொண்டு விசுறும் போது வீட்டுக்குள்ளே யிருந்த ஒரு பெண் வெளியே புறப் பட்டு ஓடுகையில், இவன் இசப்பாதை உருவின வாக்கே ஓடுகையில், அவள் ஓடிப்போய் அவ்விடத் திலே யிருந்த அசல் வீட்டிலே புகுந்து வெகுசாய்க் கூப்பிட்டு அழுதாள்.

அப்போது அவ்விடத்திலிருந்த தமிழரும் பின்னையும் சிறிது வழி நடப்புக்காரரும் கூடி சொல்தாது (சோல்ஜர்) வந்து புகுந்தானென்று பார்க் கும்போது இவன் அவ்விடத்திலே யிருந்து புதுசாய்க் கட்டின கூரைவீடு கதவில்லாத படியினாலே அந்த

வீட்டிலே புகுந்து ஒளிந்து கொண்டான். அப்போது தமிழர் பயந்து வீட்டைச் சுற்றி யிருந்தார்கள்.

அவன் அந்த வீட்டிலே சற்று நேரமிருந்து புறப் பட்டு மண்ணுங்கட்டிகளை எடுத்துக் கொண்டு போட் டான்.

அப்போது அந்தத் தெருவிலே கூட்டமாய்ப் பதுங்கியிருந்தவர்கள் பிறகே நாலுபேர் போய்ப் பிடித்து எல்லோருங்கூடி அடித்து அவனுடைய பொன் பொத்தான் முதலாகிய வஸ்துவெல்லாம் கிழிந்து போகத் தக்கதாக அடித்துக் கத்தியையும் பிரம்பையும் பிடுங்கிக் கொண்டு சின்னதுரை வீட்டிலே கொண்டுபோய் ஒப்பித்தார்கள்.

அடித்த அடியானுல் தலை பிளந்துபோய் இனி மேல் பிழைக்க மாட்டானென்று சொல்லுகிருர்கள். அவனுடைய ஆயுசு எப்படியிருக்கிறதோ, அது இனி மேல் அறியவேணும்.

இந்தச் சேதி (கவர்னர்) துரையவர்கள் கேட்டு, தமிழன் வீட்டுக்குள்ளே வெள்ளைக்காரன் புகுந்து கொண்டு பெண்டு பிடிக்கப் போனுல் அவர்கள் சும்மா யிருப்பார்களா? நல்ல வேலை செய்தார்கள் என்று சொன்னுர்.

அடித்தவர்களின்னுர் என்று தெரியாத படியினு லே விசாரிக்கிருர்கள். இன்னமும் அடித்தவன் அகப் பட்டதில்லை.

— ஆனந்தரங்கம் பிள்ளை,
புதுச்சேரி. தினப்படி சேதி குறிப்பு
22-4-1746

*

## அதிசய ஒற்றுமை

பிரீனம் ஹான்ஸ் என்னும் ஊரிலுள்ள ஒய்ட் (Mrs. White) என்னும் ஸ்திரீக்கு ஆறு குழந்தைகள். அவர்கள் அறுவரும் ஒரே தினத்தில்தான் தாம் பிறந்த நாளைக் கொண்டாடுகின்றனர்.

ஏனெனில், பெண் பிறந்தநாள் 27-7-1886. (2-3-4) மூன்று குழந்தைகள் ஒரே பிறவியில் பிறந்த நாள் 27-7-1901. (5-6) இரட்டைப் பிள்ளைகள் ஒரே பிறவியில் 27-7-1902 இல்.

இந்த அறுவரும் ஜுலை மாதம் 27 தேதியில் பிறந்தது மட்டுமின்றி அன்று 4 மணிக்குமேல் 5க்குள் பிறந்தவர்!

—'பஞ்சாமிர்தம்' சென்னை
கார்த்திகை 1924



## டர்பன் கடற்கரைக் காட்சி

தென்னாப்பிரிக்காவில் உள்ள டர்பன் நகரம் ஓர் கரை துறைப்பட்டினம் என்பது நேயர் அறியாததன்று. சென்ற சிலவருஷங்களாய் இவ்விடத்து நேர்ந்த சுறு உபத்திரவத்தால் கடலில் ஸ்நானஞ் செய்ய அஞ்சி நின்று விட்டார்கள். டர்பன் நகராதிகாரிகள் ஸ்நான கட்டம் ஒன்று ஏற்படுத்தி அதில் சுறு நுழையாதபடி தக்க பந்தோபஸ்து செய்தார்கள்.

அன்றியும், பந்து முதலிய விளையாடும் இடங்களும், காபி முதலிய பருகும் இடங்களும்,

(இந்தியாவில் உற்சவ காலத்தில் போட்டிருக்கும்) இராட்டினங்களும், இன்னும் பல விநோதங்களும் அமைப்பித்தனர். ஓர் வேடிக்கையாயிருந்தால் பார்க்கப் பிரியப் படாதவர்கள் யார் இருப்பார்கள்? அதிலும் பாமர ஜனங்கள் தானே முன் செல்வர்கள்!

அப்படி வேடிக்கை பார்க்கப் போன நம் ஜனங்களைப் பார்த்து வெள்ளையர் கோபங்கொண்டு விட்டார்கள். ஏன்? வெள்ளையர் வேடிக்கை பார்க்கும் இடத்தில் இந்தியர் நிற்கவும் வேடிக்கை பார்க்கவும் படாதாம். உடனே உத்தரவு பிறந்து விட்டது. இந்தியர் கடற்கரைக்குப்போய் வேடிக்கை பார்க்கப் படாதென்கிற உத்தரவு தான். காபிரி போலீஸ் காரரும் வெள்ளை போலீஸ் காரரும் வழியில் நின்று கொண்டு, அங்கு செல்லும் இந்தியரை யெல்லாம் விரட்டுகின்றார்கள்! என்ன நீதி பிரிட்டிஷ் நீதி!! வெள்ளை நீதி!!!

நம் தேசத்தில் ஜாதிமத வித்தியாசம் கூடாதென்று பிரசங்கிக்கும் வெள்ளைப் பாதிரி கூட்டங்கள் படிக்கும் பைபிள் வேறு. இங்கிருக்கும் வெள்ளைப் பாதிரிகள் படிக்கும் பைபிள் வேறோ? தெரிய வில்லை.

---

நிற்க, டர்பன் கடற்கரையில் ஸ்நான கட்டம் செய்ய உழைத்தவர் யாவர்? டர்பன் நகரம் சுத்தமாயிருக்க உழைப்பவர் யாவர்? அக்கடற் கரையில் உள்ள சாப்பாட்டுக் கடைகளி (Hotel) லும், சாராயக் கடைகளிலும், (Bar or Canteen) வேலை செய்து கொண்டிருப்பவர் யாவர்? மற்றும் யாவும் இந்தியர் களாலேயே அமைக்கப் பட்டிருக்க, ஏன் இந்தியர்கள் போய் பார்த்துக் களிக்கக் கூடாது?

அன்றியும், டர்பன் முனிசிபாலிட்டிக்கு இந்தியர் கிரமப்படி வரி செலுத்த வில்லையா? அவர்கள் பணமும் உழைப்பும் நல்லது, அவர்கள் கெட்டவர்களா?

—ஞானசம்பன்னன்
'சுதேசமித்திரன்' 21-8-1907

*

ஓர் தந்திரம்

இங்கிலாந்திலுள்ள நமது இந்தியாவின் காரிய தரிசியாகிய மார்லி பிரபு ஆக்ஸ்போர்டு நகரத்தில் நமது இந்தியாவைப் பற்றிப் பேசிய காலத்தில் இங்கிலாந்திலிருந்து செல்லும் இங்கிலீஷ் இந்திய உத்தியோகஸ்தர்களொவ்வொருவரும் இந்தியர்களிடத்தில் சிநேக பாவமாயிருக்க வேண்டுமென்றும், அப்படிக் கிருந்தால் இந்தியர்கள் நம்மிஷ்டம் போல் நடந்து கொள்வார்களென்றும், அப்படிக் கில்லாத பக்ஷத்தில் ஆங்கில அரசாக்ஷிக்குத் தீங்கு வருமென்று சொல்லியிருப்பதை நோக்கில், இந்துக்களாகிய நம்மை இச்சகத்துக் கிணங்குவோர்களென்று எண்ணியிருக்கிறார்.

ஏனெனில் எண்ணிறந்த ஏழை சகோதரர்கள் கஞ்சிக்கழும்போது இங்கிலாந்திலிருந்து வரும் சில சுயநலப் புலிகளுக்கு விருந்துகளும், இரவில் வாண வேடிக்கைகளும் செய்வதை யறிந்தே இவர் எழுதியிருக்கிறாரென்பதற் கையமில்லை.

—"இந்தியா" 24-?-1909
(ஆசிரியர் சி. சுப்பிரமணிய பாரதி)

*

## சிவதர்ம கைங்கர்யம்

யாழ்ப்பாணத்திலே எனது ஜன்ம ஸ்தானமாகிய உடுவில் என்னும் கிராமத்திலே. முன்ஞேர்கள் காஞ்சி புரத்திலிருந்து போய் வஸித்த காலத்திலே கட்டிப் பிரதிஷ்டை செய்து வழிபட்டு வந்த சுப்பிரமணியப் பெருமானின் ஆலயமானது இப்போது கிலமடைந் திருக்கின்றது.

இவ்வாலயத்தைக் கல்லாலமைத்து கும்பாபி ஷேகம் செய்ய எனது தமையஞரவர்கள் எண்ணிச் சொந்தத்திலே ஒரு காணியும் வாங்கியிருக்கிருர்கள்.

இந்நிலத்திலே ஆலயத்தை அமைத்துக் கும்பாபி ஷேகம் செய்து முடித்தற்கு வேண்டிய பொருள் இல்லாமையால், இந்தியா, இலங்கை முதலிய இடங் களிலுள்ள கனவான்களேயும், தர்மசீலர்களாகிய தன வைசியப் பிரபுக்களேயும் இயன்ற பொருளுதவி செய்து குறித்த தருமத்தை முற்றுப் பெறுவிக்கும்படி யான் திருவருளே முன்னிட்டு வேண்டிக் கொள்கிறேன். சுபமஸ்து.

"புல்லிஞ லொன்று கோடி
புதுமண்ணுற் பத்துக் கோடி
செல்லுமாங் காலந் தன்னிற்
செங்கல்லா ஞறு கோடி
அல்லினுங் குழலாய் கேளாய்
ஆலய மடங்க டன்னைக்
கல்லினுற் சமைத்த பேர்கள்
கயிலை விட் டகலார் மாதோ"

— வ. மு. இரத்திநேசுரையர் தமிழ்ப் பண்டிதர்,
ஞானப்பிரகாச கலாசாலை, புதுவயல்
"வைசியமித்திரன்" 1-11-1915

❀

## உண்ணுவிரதம்

ஸ்ரீமான் சுத்தானந்த பாரதியார், கதர் பிரசாரத்துக்காக குருகுலத்துக்குக் கொடுத்த 16ட0 ரூபாவைப் பெறும்வரை உண்ணுவிரத மிருக்கத் தீர்மானித்து சென்ற செவ்வாய் முதல் உண்ணுவிரத மிருந்து வருகிறார்.

—'நவசக்தி' 23-10-1925

(ஆசிரியர் திரு. வி. க.)



## ஸ்வதேசிக் கப்பல் கம்பெனி

இரண்டொரு வாரத்திற்கு முன்பாக தூத்துக்குடி ஸ்வதேசி கப்பல் கம்பெனியைச் சேர்ந்த "லாவோ" என்னும் கப்பலானது இன்னும் ஒரு வாரத்தில் வேலை செய்ய ஆரம்பிக்குமென்று வரைந்திருந்தோம்.

கப்பலானது ஒரு இடையூறினாலும் வேலை செய்யாமல் நின்று கொண்டிருக்க வில்லை. சரியான ஸர்டிபிகேட் பெற்ற கப்பல் உத்தியோகஸ்தர்கள் இன்னும் அகப்படாததால் தான் தாமதம்.

வெகு சீக்கிரத்தில் கம்பெனி வேலை செய்ய ஆரம்பித்து விடுமென்பதற்கு ஐயமேயில்லை. இனி யொருவரும் அதைக் குறித்துப் பயப்பட வேண்டியதில்லை.

—"இந்தியா" 10-7-1909

(ஆசிரியர் சி. சுப்பிரமணிய பாரதி)

---

# பூலோக கற்பக விருக்ஷம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் (1929)

நல்ல அமிருதத்தைக்கூட புத்தியில்லாத மனிதன் பொல்லாத விஷமாகச் செய்து விடுகிறான்.

தேங்காய் தேகத்திற்கு பலமும் அழகும் கொடுக்கக்கூடிய உணவு. வாய்க்கு இனிமையாயிருக்கும். சுவாமிக்கு நைவேத்தியமாகும். பூலோக கற்பக விருக்ஷமாக தென்னை மரத்தைச் சொல்வது தகுதியேயாகும்.

பூதேவியின் அமிருத ஊற்று மேலே ஏறி மரம் கருத்தரிக்கும் சமயத்தில் மனிதன் கூரான கத்தியால் அக் கருவை யழித்து வடியும் இரத்தத்தைக் குடத்தில் பிடித்து அதைக் கள்ளாகச்செய்து குடித்து மதியிழந்து ஆரோக்கிய மிழந்து நாசமாகிறான்.

மற்ற தேசங்களிலும் சாராயம் காய்ச்சவும் பீர் முதலிய மதுபானம் செய்யவும் உணவுப் பொருள்களைப் பாழாக்குகிறார்கள்.

நம்முடைய நாட்டில் உணவுப் பொருள்களைப் பாழாக்குவதோடு அப் பொருள்களைத் தரும் மூலாதாரமான நல்ல மரங்களையே பாழாக்குகிறோம்.

ஒயின் செய்ய திராட்சைப் பழங்களைக் கசக்கிச் சாறு எடுக்கிறார்கள். செடியைப் பாழாக்குவதில்லை. ஆனால் நாம் கள்ளுக்காக மரத்தையே வதம் செய்து விடுகிறோம்.

இதைப் பற்றி சர்க்கார் விவசாய இலாகாவில் கவனித்து விவசாயிகளுக்கு நல்ல புத்தி சொல்ல மாட்டார்கள். சர்க்காரே கள்ளு வியாபாரத்தின் லாபத்தை எதிர்பார்க்கிறார்கள். கள்ளுக்கு விடுவதினால் மரம் கெட்டுப்போகும் என்று அவர்கள் சொல்லமாட்டார்கள்.

ஆனால் நமக்கு புத்தியில்லையா? கையில் உடனே ரூபாய் போடுகிறார்கள் என்று ஏமாந்து முன்னோர்கள் வளர்த்த தென்னந் தோப்புகளைப் பாழாக்கலாமா?

பச்சை மரத்தை வெட்டக்கூடாது. தோப்புகளை வளர்க்க வேண்டும். ஒவ்வொருவனும் இறப்பதற்கு முன் ஒரு மரமாவது புதிதாக வளர்த்துப் பின் சந்ததிகளுக்கு வைத்து விட்டுப் போக வேண்டும். இப்படியிருக்க, மரங்களைப் பாழாக்குவது பெரும் பாவமாகும்.

கள்ளு எடுப்பதால் மரம் சாகாது என்று சிலர் சொல்லலாம். கள்ளுக்கு விடப்பட்ட மரத்தின் பலம் குறைந்து போகும்; வளர்ச்சி குறைந்து போகும்; ஆயுள் குறைந்து போகும்; இவை எவனுக்கும் தெரியும்.

மரத்தின் ஜீவரஸம்தான் காய்வடிவாகிறது. எந்த அளவுக்கு வேண்டுமோ அந்த அளவுக்கு மரம் தன் இரத்தத்தைக் கொண்டு கருத்தரித்து உண்டான சிசுவுக்கு உணவு ஊட்டி வளர்த்து வரும்.

கள்ளு இறக்குவதோ அப்படியல்ல. மரத்தில் ஈரம் வற்றும் வரையில் குடத்தில் வடிய வேண்டியது. அதன் கஷ்டம் நமக்குத் தெரியாது. வாயில்லாதபடியால் கொஞ்ச நாள் வரையில் பொறுத்துக் கொண்டிருந்து பிறகு உயிரை விட்டு விடுதலை அடைகிறது.

— 'விமோசனம்' 1929 கார்த்திகை

# தகழி சிவசங்கரப் பிள்ளை

வ. ஈசுவரமூர்த்தி

மலையாள இலக்கியத்தில் இன்று தலைசிறந்து விளங்குபவர் தகழி சிவசங்கரப் பிள்ளை. 'செம்மீன்' என்ற நாவல் இவருக்கு உலகப் புகழை அளித்துள்ளது. 'இது திரைப் படமாக உருவாக்கப்பட்டு ஜனாதிபதியின் பரிசு பெற்றது. இப்படத்தினால் 'தகழி யின் பெயர் மலையாள இலக்கியம் அறியாத எல்லா மாநிலங்களிலும் பரவி விட்டது.

ஒரு காலத்தில் வங்காளியிலும், மராத்தியிலும் உள்ள இலக்கியத்தை தமிழிலும் மற்ற மொழிகளிலும் மொழி பெயர்ப்பது வழக்கமாக இருந்தது. இன்று மலையாள இலக்கியத்திலிருந்து வட நாட்டிலும், வெளி நாடுகளிலும் மொழி பெயர்த்து வெளியிடுகிறார்கள். இந்தத் திருப்பத்தை ஏற்படுத்திய பெருமை தகழியை சேரும்

அண்மையில் கோவையில் நாங்கள் நடத்திய இலக்கிய விழாவிற்கு தகழியை அழைக்க முடிவு செய் தோம். அதில் தமிழ் இலக்கிய எழுத்தாளர்களையும் அழைத்திருந்தோம்.

தகழி, மலையாள இலக்கியத்துக்கு மட்டும் அவர் சிறப்புச் செய்பவராகப் படவில்லை. மலையாள மக்க ளின் எளிமைக்கும், சாதனைக்கும் சிறப்புச் செய்யும் அபூர்வ மனிதராகப் பட்டார்

முதலில், அவர் முகவரியைக் கண்டுபிடிக்க முடி யாத ஒரு குக்கிராமத்தில் குடி இருந்தார். ஆனால் நல்லகாலம் தகழி கிராமத்தில் அவருக்கு டெலிபோன் இருந்தது. அவர் எழுதிய கடிதத்தில் எந்த விவரமும்

தெரியவில்லை. டெலிபோனில் அவர் வருகை குறித்து கேட்டதில் விமானம் மூலம் வருவதாகக் கூறினார். அதேபோல் அவர் சொல்லிய விமானத்திலேயே வந்து சேர்ந்தார் விமானத்திலிருந்து இறங்கிய எல்லா மனிதர்களிலும் இவர் வேறுபட்டிருந்தார். அரைக் கை சட்டை. பித்தான் இல்லாத சட்டை. ஒரு முண்டு கேரளாபாணியில் அதை மடித்துக் கட்டிக்கொண்டு இறங்கினார். கக்கத்தில் ஒரு சிறு பை. புகைபிடித்த வாறே இறங்கி வந்தார்.

'நான்தான் தகழி' என்று என்னைக் கண்டதும் அறிமுகப்படுத்திக் கொண்டார். அவரை அழைத்துச் சென்று அவருக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த அறையில் ஓய்வு எடுக்கச்செய்தோம். ஆனால் அவர் எங்களோடு பேச விரும்பினார். நாங்களும் பேச ஆவலாக இருந்தோம்.

"நீங்கள் எவ்வளவு காலமாக எழுதிக்கொண்டிருக் கிறீர்கள் ?"

'நான் கல்லூரியில் படிக்கச் சென்ற காலத்தி லிருந்து எழுதிக் கொண்டிருக்கிறேன். உண்மையில் சொல்லப் போனால் எனது குடும்பமே கலையிலும், எழுத்திலும் ஈடுபட்ட குடும்பம்தான். ஆகவே கதை எழுதுவது என் இயல்பான தொழில்

"நான் எழுதிய எல்லாக் கதைகளுமே நான் வாழ்க்கையில் பார்த்துத் தெரிந்து கொண்ட பிரச்னை கள் தான் எப்பொழுது எழுத வேண்டுமென்று ஒரு வேகம் வருமோ அப்போது அதை எழுதி விடுவேன். எந்த உருவத்தில் அது வெளிப் பட்டாலும் அதை அப்படியே எழுதிவிடுவதுதான் எனது பழக்கம்.

"எனது ஒவ்வொரு நாவலுக்கும், கதைக்கும் பின் னல் ஏதாவது ஓர் உண்மையான வாழ்க்கை இருக்கும்.

அதை எடுத்துச் சொல்லுகின்ற பாணிதான் தகழிக்கு சொந்தம்.

“செம்மீன் நாவலை எப்படி எழுதினீர்கள்?”

அதைச்சில நாட்களில் தொடர்ந்து எழுதி முடித்து விட்டேன். அதில் வருபவர்களில் பலர் நான் வக்கீலாக இருந்தபோது என்னிடத்தில் தொழில் காரணமாக வருபவர்கள். அவர்கள் வாழ்க்கையில் நான் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவன். ஆகவே, செம்மீன் கதை என்னைப் பொறுத்த வரை எனது எல்லா எழுத்துக்களையும் போன்றதுதான்”?.

“நீங்கள் எழுதிய வேறு சிறப்பான நாவல்கள் என்ன?”

“ஏணிப்படிகள்”. அது சென்ற காலத்திய திருவாங்கூர் சமஸ்தான அரசியல் வரலாற்றைக் கூறுகிறது. அதிகாரிகள் எப்படி தங்கள முன்னேற்றத்துக்காக மக்கள் முன்னேற்றத்தைப் புறக்கணித்தார்கள் என்பது அதன் கதை. மக்கள் முன்னேற்றத்தைப் புறக்கணித்ததால் மகாராஜா ஆட்சி மாறி ‘பாப்புலர்’— ஜனநாயக ஆட்சி ஏற்பட்ட ஒரு நூற்ருண்டு வரலாற்றை அந்த நாவல் எடுத்துக் காட்டுகிறது: இது படமாகவும் எடுக்கப்பட்டு வருகிறது”.

அண்மையில் ‘ஏணிப்படிகள்’ என்ற சினிமாவைப் பார்த்தேன். இப்படி நமது அதிகாரிகளின் மனப் போக்கை மையமாக வைத்து இலக்கியம் படைக்க நமது எழுத்தாளர்கள் ஏன் முன்வரவில்லை என்று எண்ணத் தோன்றியது.

“இப்போது என்ன எழுதி வருகிறீர்கள்?” என்று கேட்டேன்.

இரு கைகளையும் பிசைந்து காட்டினார். புரிய வில்லை. ''கயறு'' என்றார். கயறு திரிப்பதைப் போல் கைகளைக் காட்டினார். "கயறு திரிப்பதைப் போல் நீண்ட நாவலாகப் பல பாகங்களில் எழுதிக் கொண் டிருக்கிறேன்'' என்று சொல்லிச் சிரித்தார்.

அது தற்காலக் கேரள சமூகத்தைப் படம்பிடித் துக் காட்டும் உன்னத காவியமாக அமையும் என்பது உறுதி.

தகழியும் அன்று அவருக்கே உரிய திறந்த மனத் தோடு மலையாள இலக்கியம், தமிழ் இலக்கியம் குறித்து ஆங்கிலத்தில் சிறப்பான உரை நிகழ்த்தினார்: அவருடைய ஒவ்வொரு வாக்கியமும் பொருள் நிறைந்து விளங்கியது.

அவர் சொன்னார்: நான் ஒரு விவசாயி. அது எனது தொழில். நாளை நான் சென்று எனது வயலில் அறுவடை செய்யும் தொழிலைக் கவனித்தாக வேண் டும். இல்லை எனில் கேரளாவில் தொழிலாளிகள் அவர்கள் பேசிய கூலிக்கு மேல் அதிகக்கூலி கேட்பார் கள். எங்கள் நாட்டில் தொழிலாளிகள் விழிப்புப் பெற்றவர்கள். மக்களும் அப்படியே; அதே போன்று இலக்கிய ரசிகர்களும்! இங்கே நீங்கள் யாருக்காகவும் அனுவசியமாகக் காத்துக் கொண்டிருக்கும் நிலைமை யை மாற்றினால் அல்லாமல் உங்கள் இலக்கியமும் வளராது; உங்கள் தொழிலும் வளராது.

''மலையாள இலக்கியத்தை உருவாக்குபவர்கள் அந்த இலக்கியம் உருவாகும் சூழ்நிலைகளிலேயே வாழ்கிறார்கள். அதனால்தான் அவர்கள் வாழ்க்கையை அவ்வளவு உண்மையாக எழுத முடிகிறது. ஆனால் தமிழ் நாட்டிலும், பம்பாயிலும், டெல்லியிலும் நான்

எழுத்தாளர்களை அப்படி காணமுடியவில்லை. நான் சாகித்திய அகடெமியில் ஒரு பொறுப்பு வகிக்கிறேன். ஆகவே, அடிக்கடி உங்கள் எழுத்தாளர்களை மட்டு மன்றி இந்தியாவின் பல எழுத்தாளர்களையும் சந்திக் கிறேன். இங்கே ஒரு எழுத்தாளன் ஒரு கதையோ, புத்தகமோ எழுதிய பின்பு அவன் பட்டணத்தை நோக்கி ஓடிவிடுகிறான். பட்டணத்திலே சென்று உட்கார்ந்து கொண்டு கிராமத்தைப் பற்றிக் கதை எழுதுகிறான்! இது எப்படி இலக்கியமாகிவிட முடியும்.

''சத்தியஜித்ரேயின் 'பதேர் பாஞ்சாலி' கதையை எழுதிய விபூதி பூஷன்பானர்ஜி ஒரு பள்ளி ஆசிரியர். அவர் தனது வாழ் நாளில் கல்கத்தாவை ஒரு தடவை கூடப் பார்த்தது கிடையாது! அவசியம் இல்லை! உண்மையான இலக்கியம் உருவாக உண்மையான வாழ்க்கையை இலக்கிய கர்த்தா வாழ வேண்டும். உங்கள் எழுத்தாளர்கள் நடை உடை பாவனைகள் கூட தமிழ் நாட்டு பாணியில் இல்லை! உங்களுக்கு நான் யோசனை சொல்வதாக இருந்தால் அது இது தான்: நீங்கள் மீண்டும் கிராமத்திற்குத் திரும்புங்கள். நீங்கள் கண்டு அனுபவிப்பதை எழுதுங்கள். எழுத வேண்டும் என்பதற்காக எழுத வேண்டாம். எப்படி அந்த அனுபவம் உங்களை உந்துகிறதோ அப்படியே எழுதுங்கள். அதுதான் இலக்கியமாக முடியும்.''

தகழியின் கருத்துக்களுக்குத் தகழியே நல்ல இலக்கணமாக இருந்தார்.

''எனக்கு சினிமாத் தொழில் தெரியாது; ஆகவே கதை வசனம் எழுதும் தொழிலில் இறங்குவதில்லை; எனக்கு எழுதுவது இயல்பு; அதோடு நின்று விடுகி றேன்.''

'செம்மீன்' கதையை யுனெஸ்கோ ஆங்கிலத்தில் வெளியிட முன் வந்தபோது அவருக்கு ஆங்கிலம் தெரிந்திருந்தும் மொழி பெயர்க்கும் பணியை வேறு ஒருவரிடமே ஒப்படைத்து விட்டாராம். ஆங்கில மொழிபெயர்ப்பாளருக்கு அருகிலிருந்து தனது எண்ணங்களை விளக்குவதோடு அவர் திருப்தி அடைந்து விட்டார்.

அவருடைய நாவல் இப்போது அமெரிக்காவில் 80 ரூபாய் விலையில் மொழி பெயர்ப்பில் வெளியாகி உள்ளது. அவருடைய சில நாவல்கள் ஏற்கனவே இங்கிலாந்தில் வெளியாகி உள்ளன. இந்திய அரசாங்கம் அவரைப் பல முறை வெளி நாடுகளுக்கு இலக்கியத் தூதுவராக அனுப்பி உள்ளது.

தகழி ஒரு சிறந்த மனிதர்; அவருடைய அடக்கம் நம்ப முடியவில்லை. அவருடைய சிறு கதைகளையும், நாவல்களையும் போல தகழியும் மீண்டும் மீண்டும் பழகுவதற்கு ஏற்ற மனிதர்.

———————

உன்னைவிட ஒருவன் அறிவு பெற்றிருந்தால் அவனிடம் கோபம் கொள்ளாதே. அது அவன் குற்றமல்ல

—நீதி நூல்

மண் குயவனிடம் கூறியது :—

" இன்று நீ என்னை அழுத்துகிறாய்.
நான் உன்னை அழுத்தும் காலம் வரும் "

—கபீர்

# காஞ்சீபுரம்
# விவசாயக் கண்காக்ஷிசாலை 1904

காஞ்சீபுரத்து கருட உற்சவ காலத்தில் நடத்திய கண்காக்ஷி சாலையைச் சிலர் பார்த்திருப்பார்கள். அது விஷயமாய்ப் பலர் படித்திருப்பார்கள். ஆயினும் நான்கண்ட பல விஷயங்கள் சிலருக்கு மகிழ்ச்சியைத் தருமென்று நம்பி இதை எழுதத் துணிந்தேன்.

இக் கண்காக்ஷி சாலை பெரிய காஞ்சியில் பலரும் சேரக் கூடியதும் விசாலமாய் இடம் கிடைக்கக் கூடியதுமான இடத்தில் அமைக்கப் பட்டது. பந்தல் சோடிப்பு வாசல்கள் அமைப்பு முதலியன வெகு சிங்காரமாயும் ரமணீயமாயு மிருந்தன.

புதிதாய் செய்த ரஸ்தாக்கள் அகலமாயும் அவைகளின் பேரில் மணல் பரப்பியும் இருந்தன. பந்தலுக் கெதிரில் ஒரு குழாயிலிருந்து ஜலம் உயரப் பாய்ந்து மழைத் துளிகள் விழுமாறு பரந்து விழுந்து வந்தவர்களை வசியம் செய்தது. மாடுச் சந்தை கூடுமென்று அங்கங்கே குழாய்கள் அமைக்கப் பட்டன.

பந்தல் நுழைவதற்கு முன்னமே மேல் ரோகபுரம் வாழைநார் கருவிகள் இருந்தன. இரண்டு சிறுவர் வாழை மட்டையிலிருந்து நார் எடுத்துக் கொண்டே யிருந்தார்கள். நாரை எடுத்தவுடனே அதைக் கழுவ மார்க்கம் இருந்திருந்தால் நார் மிக உறுதியாயிருக்கும்.

காவேரிப் பாய்ச்சல் நிலங்களில் வாழை வளர்ந்து இப்போது வீணாய்ப் போகும் மட்டைகளிலிருந்து நார் எடுப்பது, தக்க வேலையில்லாமல் சாவடிகளில் ஒன்று கூடி வீண் காலம் போக்கும் குடிகளுக்கு ஒரு நல்ல உபாயம். அவர்கள் வெறுமையாய் இருப்பதை இக் கருவி கொண்டு நார் எடுத்து லாபம் சம்பாதிக்கலாம்.

ஓக்ஸ் கம்பெனியாரின் ஜலம் இறைக்கும் சாதனங்கள் இச் சமயத்தில் நன்றாய் ஜலமிறைத்தாலும் குடித்தனக்காரர் கையில் கெடாது வேலை செய்து குடித்தனத்தை மேன்மைப் படுத்துமா என்று சந்தேகம் பிறக்கிறது. இக் கருவிகளின் குறைவென்று அர்த்தம் கொள்ளப் படாது. தேசத்தில் சாதுரியமாய் வேலை செய்யும் கம்மாளர் குறைவே. இதற்குக் காரணம் இங்கே விதை விதைக்கும் கொர்ரு கலப்பை வேலை செய்து கொண்டிருந்தது. பின்னும் 35 அடி உயரமுள்ள இரண்டு வாழை மரங்கள் இருந்தன. இம் மரங்கள் குலை தள்ளாதவை. இவை காஞ்சிபுரத்துத் தோட்டங்களில் வளர்ந்தவை. இங்கு ஆற்றுப் பாய்ச்சல் கிடையாது. கிணற்றுப் பாய்ச்சலில் விளைந்தவைகள். இவைகளினால் காஞ்சிபுரத்து மண்ணின் கொழுமை வெளியாகிறது.

காஞ்சிபுரம் புராதனமான பெரிய பட்டணமாய் இருந்தது. இப்போது அனேக தாக்குகள் குட்டிச் சுவராகவே யிருக்கின்றன. மண் சாம்பல் நிறம். இது கிராம நத்தத்துப் பழைய மண். இதில் விளையும் கீரை காய் வகைகள் உருசியில் சிறந்தவை. இதில் திராக்ஷை, ஆரஞ்சு, பொம்பிளிமாஸ், சீமை அத்தி, அனுசி, கொய்யா, மா முதலியன நன்றாய் விளையும்.

சென்னைக்குச் சுமார் 60 மைல் தூரத்து ரயில் சமீபத்திலிருந்தும், இந்நிலம் தகுந்தவாறு லாபம் தரா

மல் இருப்பது காஞ்சீபுரத்துக் குடிகளின் மதியீனமே ஒழிய வேறல்ல. பந்தலுக்குள் பிரவேசிக்கவே அத்தர் முதலியவைகளால் குபீலென்று வாசனை நிறைந்திருந்தது. மற்ருெரு பக்கத்தில் பெங்களூர் பழங்கள் காய்கறி முதலியவற்றின் மணம்.

சுமார் 140 கூடைகளில் நெல் வகைகள் இருந்தன. சிதம்பரம் தாலுக்கா தாசில்தார் சுமார் 40 வகை நெல் அனுப்பி இருந்தார். விசாகப்பட்டணம் ஜில்லாவிலிருந்து கொண்டு வந்து காஞ்சீபுரத்தில் பயிரான நல்ல நெல்லும் அவற்றின் அரிசியும் இருந்தன. துல்லியமாயும் நாணயமாயுமிருந்த இருவகை அரிசி கஞ்சம் ஜில்லாவிலிருந்து வந்தன. சைதாப்பேட்டை விவசாய வித்தியா சாலையிலிருந்து பலவகை நெல் வந்திருக்கின்றன. இவை பம்பாய் ராஜதானி வகைகள். இவைகள் சைதாப்பேட்டையில் விளைவிக்கப் பட்டன. இந்த நெல்வகைகள் மிக நேர்த்தியானவை.

சிலவற்றின் அரிசியைப் பல்லால் கடிக்க சப்தத்துடன் உடைவதால் சாதம் நன்ருய் ஆகுமென்று தெரிகிறது. பாங்கோ என்னும் நெல் 100 நாளில் முதிருமாம். தூர் அதிகமாய் கட்டுகிறதாம். கேவல நிலத்தில் நன்ருய் விளைகிறது. அரிசி நேர்த்தியானது.

இந்த வித்தியாசாலை 57 வகை எண்ணெயும், 8 வகை வேர்க் கடலையும், 20 வகைப் பருத்தியும், 25 வகை எருவும் 100-க்கு அதிகமான நாரும் கொண்டு வந்தது. இவைகள் கவர்ன்மெண்டுச் சரக்குகள். சிறிய புஸ்தகம் ஒன்று செய்து அதில் இச்சரக்குகளின் விவரத்தைக்காட்டி குடிகளுக்குக் கொடுத்திருப்பதால் அவர்களின் பாடு பெரு நன்மையை உண்டாகும்.

பூசணி விதை எண்ணெய், பூசணிப் பிண்ணுக்கு எரு சொரைக்காய் எண்ணெய் முதலியன விசித்திர மானவை. இவைகள் கூலிக்குக் கட்டுமா என்னும் ஒரு பெரிய சந்தேகம். ஒவ்வொரு செடியிலும் தைலம் நார் பிசின் முதலியவை இருப்பது ஸ்தாவர சாஸ்திரம் வாசிக்கிறவர்களுக்குத் தெரிந்த விஷயம். ஆனுல் இவைகளெல்லாம் கூலி கட்டாததால் சிலவற்றை நாம் உபயோகத்தில் கொண்டு வந்திருக்கிரும். ஆகையால் கூலி கட்டும் சரக்குகளை மாத்திரம் ஒரு காட்லாக் செய்வது உத்தமம். சால் மொகர் ஆயில் என்பதும் நீரடி முத்து எண்ணெய் என்பதும் ஒன்றே யல்லவா? பாஷையினுல் பேர்கள் வேறுபட்டன. இப்படியே அநேகம் இருக்கு மென்று நம்புகிறேன்.

ரங்கராஜி பிரதரும், சைதாப்பேட்டை விவசாய வித்தியாசாலையும் வெண்ணெய் கொண்டு வந்தார்கள் ராஜாவின் வெண்ணெய் மிக நேர்த்தியா யிருக்க, வித்தியாசாலை வெண்ணெய் நீர்த்தும் அழுக்கு படிந்த நிறமாயும் இருந்தது. இது இவ்வாறு இருக்கக் காரணம் அதைக் கொண்டு வந்தவரின் வல்லமையும் சாக்கிரதையுமே யொழிய வேறல்ல.

பின்னும் கண்காக்ஷிக்கு வரும் பொருள் 10 நாளுக்கு இருக்க வேண்டு மென்று கொண்டுவரப் பட்டாலும் 3 வது தினத்திலேயே வெண்ணெய் எடுக்கும் சாதனங்கள் (Separasor & churm) எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள்.

இவர்கள் நாரெடுக்கும் கருவி, பல யந்திரங்கள் தட்டுவெட்டும் யந்திரம் முதலியவைகளைக் கொண்டு வந்தார்கள். தகுந்த காலத்தில் அவை சேராததினுல் அவைகளை ஒழுங்காய் வைக்கவில்லை. இதல்லாமல்

மாடு தின்னக் கூடிய நூறு வகைப் புல்லைக் கொண்டு வந்து சைதாப்பேட்டை ஸ்டேஷனில் விட்டுவிட்டதாகத் தெரிந்தது.

செங்கல்பட்டு ஜில்லா காட்டு இலாகா உத்தியோகஸ்தர் பல மரங்களையும் எரு இலைகளையும் கொண்டு வந்தார். சாவாப் பருப்பு இது வரையில் உயர்ந்த திருப்பதி மலையில் வளர்ந்து வந்தது. மற்ற இடங்களில் அது விளையாது. திருவள்ளூர் குன்றுகளில் இது வளர்ந்து வருகிறது

சிவபுரியிலிருந்து நல்ல புகையிலை வந்திருந்தது. இப் புகையிலை சாதாரணமாய் இலையொன்று அரையணுவுக்கு தஞ்சை ஜில்லாவில் விற்கிறது.

பலவகைப் பொருள்களில் பார்லகிமிடி பாய் விசித்திரமாயும் நாணயமாயுமிருந்தது. இது சோளத்தட்டு ஈர்க்கினுல் செய்யப் பட்டது. அவ்வூரிலிருந்தே ஒரு வித துடைப்பம் வந்திருந்தது. துடைப்ப வியாபாரம் நம்மூரில் உண்டு. அமெரிக்கா முதலானவர் ஒருவித சோளத்தை விளைவித்து தூரிலிருந்து தானியத்தைச் சீப்பினுல் பிரித்துக் கொண்டு துடைப்பத்துக்கு உபயோகிக்கிருர்கள். இந்தத் துடைப்பத்துக்கென்றே விஸ்தாரமாய் இவ்விதச் சோளம் விளைவிக்கப் படுகிறது. பார்லகிமிடி துடைப்பம் ஒருவித நாணல் கதிரா யிருக்க வேண்டுமென்று யூகிக்க வேண்டியிருக்கிறது.

கர்னூல் ஜில்லாவில் நொஸம் கிராமத்து புத்தி சாதுர்யமான படங்கள் வந்தன. யானை வாகனத்தில் பெருமாள் ஏறிப்போகிறது ஒரு படம். அதில் பல ஸ்திரிகளினுல் இணைக்கப்பட்டு யானை உருவமாயிற்று அதே ஜில்லாவில் நெய்யப்படும் கம்பிளிகள் வந்தன.

ஆர்ணிமல் வெள்ளைக்காரர் டொப்பிக்கென்று செய்யப் பட்டு வந்தது. பற்பல விதமான காட்டு மரங்கள் மாதிரிக் கென்று வந்தன.

ஒக்ஸ் கம்பெனியிலிருந்து தோட்டங்களுக்கு உப யோகப்படும் பற்பல கருவிகள் வந்தன. விரல்போன்ற களைகட்டு, பிக்ஆசி கரும்பு வெட்டுக் கத்தி, தோட்ட பம்பு முதலியன. இவர்கள் காப்பிக் கொட்டை பொடி டப்பிகள் மாதிரிக்குப் பல பெயருக்குக் கொடுத்தார் கள்.

சென்னை விசித்திரசாலை யிலிருந்து நூதனமாய் பதம் செய்யப்பட்ட நீலவர்ணத் தோல் சாமான்கள் வந்தன. பலவித பூட்ஸ்களும் ஏற்றச் சால்களும் இருந்தன.

புதுமாதிரி நீரிறைக்கும் யந்திரம் அனேகமாயிருப் பினும் சூணும் பேட்டை ஜமீன்தார் தவிர மற்றவர் காட்டவில்லை. சூணும்பேட்டை ஜமீன்தார் ஒரு சிறிய மாதிரியைக் காட்டினார். அதைத் தக்கவாறு வேலை செய்து காட்டுபவர் கிடையாது.

பங்காரு பாளையம் ஜமீன்தார் வெண்ணெய் கடை யும் பெட்டி ஒன்றை அனுப்பினார். இது நாட்டு மத்தை விட எந்த விஷயத்திலும் சிலாக்கியமல்ல. பற்பல நிறங்களமைக்கப் பட்டாடைகளும் இரண்டு தரியு மிருந்தன.

காஞ்சிபுரத்தில் கைக்கோளர் அதிகமுண்டு. ஜெயில்களில் உபயோகப் பட்டு வருகிற தரிகளில் இரண்டு காஞ்சிபுரத்தில் மகா-ா-ஸ்ரீ அப்பாயி நாயுடு அவர்களால் ஜனங்களுக்குக் காட்டப் படுகின்றன. இவற்றை காக்ஷி சாலைக்கு கொண்டு வரவில்லை.

நாயுடு தன் சிறு தோட்டத்தில் பல பாத்திகள் செய்து நெல், கேள்வரகு, எள், கீரை முதலியன விளை வித்து இருந்தார். பலவகை எருவின் பிரயோசனத் தைக்காட்ட வேண்டுமென்னும் எண்ணம். மாட்டு எரு, குப்பை எரு, ஆட்டு எரு, தழை எரு, நரகல் எரு, பன்றி எரு இவைகள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பாத்தியில் போட்டு நெல் நாத்து விட்டு இருந்தது. கேழ்வரகும் அவ்வாறே. எள் கெட்டுப்போயிருந்தது. ஏனெனில் விதைத்த தினம் இராத்திரி மழை வந்தது.

இந்தக் கண்காக்ஷி ஜனங்களுக்குப் பிரயோஜனப் படவில்லை. ஏனெனில் ஆள் ஒன்றுக்கு சில நாள் இரண்டு அணாவும் மற்ற நாள் ஒரு அணாவும் கொடுத் துப் பார்க்க வேண்டியிருக்கிறது.

—'தென்னிந்தியா வர்த்தமானி'
16—6—1904

———

உன் கடமையைச் செய்யாமல் சும்மா இருந்து கொண்டு எதுவும் விதிவசப்படி தானே நடக்கும் என்று குதர்க்கம் பேசாதே!

விதி வசத்தின் மீது பழி போடுவது சோம்பேறி களின் குயுக்தி.

விதி வசத்தைப் பற்றிக் கவலைப்படக் கூடாது. அருளை நாடி, இடுப்பைக் கட்டிக் கடமைகளை அழ காகச் செய்ய முற்படு.

— கவ்து நாயகம்

# மகா மேரு யாத்திரை (1934)

ஆர். அனந்தகிருஷ்ண சாஸ்திரி

நார்வே தேசத்தில் ட்ரோணியம் என்ற கடற்கரை நகரிலிருந்துதான் மகாமேரு பிரதேசத்திற்குப் புறப்பட வேண்டும். மகாமேரு பிரதேசத்திற்கு ஆர்க்டிக் பிரதேசம் என்று பெயர் வழங்குகிறது. இவ்விடத்திலிருந்து மகாமேரு சுமார் ஆயிரம் மைல் தூரத்திலிருக்கிறது.

ட்ரோணியத்திலிருந்து யாத்திரை செய்த கப்பல் தபால் கொண்டு போவது; ஆகையால் ஒவ்வோரிடத்திலும் தபாலைக் கொடுத்து வாங்கச் சுமார் அரைமணி நேரம் வரை நிற்கும். அப்பொழுது நான் கீழே இறங்கி அந்தக் கிராமங்களைச் சுற்றிக் கொண்டு வருவேன். தலையில் தலைப்பாகையும் கழுத்தில் சால்வையும் அணிந்து கொண்டுள்ள மஞ்சள் நிற மனிதனை அத்தேசத்தார் பார்த்திராததினால் என்னைப் பார்த்து வியப்புற்றனர். சிலர் கப்பல் அதிகாரியிடத்தில்போய் என் வரலாற்றை வினவியதுமுண்டு.

கப்பல் ஏறின முதல் நாளில் கப்பல் அதிகாரியைச் சந்தித்து மறுநாள் காலையில் தண்ணீரில் ஸ்நானத்திற்கு ஏற்பாடு செய்யச் சொல்லப் போனேன். தண்ணீரில் வைகறையில் ஸ்நானம் செய்தலென்பதை அவர் கேட்டிராதவர்; ஆதலால் அஞ்சி உடலுக்குத் தீமை வந்தால் தாம் பொறுப்பேற்க நேருமாகையால் நான் எவ்வளவு தூரம் பிரார்த்தித்தும் தண்ணீர் அறை

சாவியைக் கொடுக்க முடியாது என்று மறுத்து விட்டார். அவருடைய மனைவியிடத்தில் சென்று சிறிது நேரம் வேதாந்தம் பேசிக்கொண்டிருந்த பிறகே இந்தியாவில் குளிர்காலத்தில் கூடப் பலர் கங்கை முதலான நதிகளில் வைகறையில் நாலு மணிக்கு ஸ்நானம் செய்யும் வழக்கத்தையும் இந்துக்களின் ஆசாரத்தையும் சொல்லி உறுதிப் படுத்தினேன். அவ்வம்மைதயையால் தண்ணீர் அறைச் சாவியை வாங்கி மறுநாள் வைகறையில் ஸ்நானம் செய்தேன். பிறகு ஜபம் பூஜை முதலிய எல்லாம் முடிந்து வெளியில் வந்தவுடன் எனக்கு ஸ்நானத்தினால் கெடுதல் உண்டா என்று பார்க்கப் பலர் வந்தார்கள்.

பால், பழம், பச்சைக் காய்கறியாகிய உணவைப் பார்த்து நான் ஒரு ஸித்த புருஷன் என்றும் கீழ் நாட்டில் அவதரித்திருப்பதாகவும் சொல்லலாயினர்.

என்னைப்போல் இந்தியாவில் கோடிக்கணக்கானவர் உண்டு என்று சொல்லியும் அவர்கள் நம்பவில்லை. இதை வழக்கத்தினால் சம்பாதிக்கலாம்; இஃது ஒன்றினாலேயே மோக்ஷம் கிடைத்து விடாது என்று நான், அவர்களுக்குக் கூறுவேன். என்ன சொன்னாலும் அவர்கள் அவற்றை அங்கீகரிக்க வில்லை.

பிறகு மெள்ளமெள்ள 66-வது கோடு (லாடிடியூட்) தாண்டினேன். கணித சாஸ்திர வித்வானாகிய பாஸ்கராசாரியார் சுமார் ஆயிரம் வருஷங்களுக்கு முன் எழுதிய "சித்தாந்த சிரோமணி" என்னும் நூலில் 66-வது கோடு தாண்டி வடக்கே போகப் போகப் பகல் நேரம் மிகுதியாகவும், மேருவில் ஆறு மாதம் ஒரே பகலாகவும் இருக்கும் என்று கூறியது ஞாபகத்துக்கு வந்தது; பகல் அதிகரிக்கலாயிற்று

3

ட்ரேம்ஸோ என்கிற இடத்தில் 68-வது கோட்டில் மே மாதம் 14-ந்தேதி இரவு 11-45 மணிக்கு மேற்கு நோக்கி நின்று சூர்யன் வரவை எதிர் பார்த்தேன். ஈசுவர கிருபையினால் அன்று வானில் மேகம் பரவுவதும் பனி விழுவதும் இன்றி இருந்தது. மேலைக் கடலிலிருந்து ஒரு ஒளிப்பிழம்பு தோன்றி உடனே வடக்கே ஓடிவிட்டது. இதைத்தான் "பாதிராத்திரி உதய ஸுர்ய" னென்றும் மேற்கில் உதித்து கிழக்கில் அஸ்தமனமாகிற தென்றும் வேதம் கூறுகிறது. இந்த ட்ரேம்ஸோவில் பாதி ராத்திரியில் உதித்த ஸுர்யன் உடனே அஸ்தமனமாகாமல் சரியாக நூற்றொரு நாட்கள் வானில் குயவன் சக்கரத்தை யொப்ப தணிந்து சுழற்றிக் கொண்டு ஆகஸ்டு மாதம் கடைசியில் கிழக்கே அஸ்தமனமடைகிறான். அப்படியே தக்ஷிணாயனத்தில் 101 நாட்கள் சூரியன் ஒளியின்றி ஒரே இரவாக இருக்கும். இந்த இடத்தில்தான் முன்னோர் "சதராத்திரக்கிரது" நடத்தியதாக ச்ரௌத சூத்திரங்கள் கூறுகின்றன. 101 நாட்கள் ஒரே இரவாயிருக்கிற வேறோரிடம் இதற்கு நேரே கீழ்ப் பூமியிலாகும் அந்தப் பூமி அமெரிக்காவின் வட பாகத்தில் ஆர்க்டிக் பிரதேசத்தில் அலாஸ்கா என்கிற இடமாகும். ஆரியர் அந்தப் பிரதேசத்தில் பண்டைய நாளில் வசித்துவந்ததாகச் சரித்திரங்களினால் விளங்கவில்லை; ஆகையால் இந்தப் பிரதேசத்திலேயே ஓர் இரவு முதல் நூறு இரவு வரையில் நம் பெரியோர் யாகம் நடத்தி யிருக்க வேண்டும்; இதை மனதிற் கொண்டு ருக் வேதத்தைப் படித்தால் அதில் வர்ணித்திருக்கிற சூரிய வர்ணங்கள், ஆறுமாதம் சூரியனும், ஆறு மாதம் சூரியனில்லாத காலமும், பலவித உதய காலமும் மூன்று முதல் ஐந்து வரையிலுள்ள ருதுக்களும் கணித சாஸ்திர முறைப்படி நன்கு விளங்கும்.

ஆர்க்டிக் பிரதேசத்தில் சூரியன் எப்பொழுதும் குறைவின்றி யிருப்பதால், பூமியில் உள்ள நிலங்களில் தானியங்கள் மும்முறை விதைத்து அறுவடை செய்யப் படுகிறது. ஆகையால் உணவுப் பண்டங்களுக்கு குறைவேயில்லை. தக்ஷிணாயனத்தில் ஒரே பனிமழை; அப்பொழுது பயிர்த் தொழில்கள் நடப்பதில்லை. கைத் தொழில் வேலைகள் நடக்கும். ஒரே இராத்திரி காலங்களில் சூரிய ஒளியே இல்லாததால், சந்திரனுடைய நிலவாலும், விடியற்கால (அருணோதய) பிரகாசத்தினாலும், மகா மேருவிலிருந்து ஒரே ஒளிப் பிழம்பு தெற்கே பார்த்து வீசும் பிரகாசத்தினாலும் (ஆரோரா போரியாலிஸ்) இருட்டே தெரிவதில்லை. நம் தேசத்தில் சூரியனை மறைத்து இருளுடன் மழை பெய்யும் காலத்துப் பகல் போல இருக்கும். ஆனால் அடிக்கடி ஒளி மாறும்.

இவ்விடத்தில் ஒரு ஆப்சர்வேடரி (நக்ஷத்திர யந்திர சாலை) வைக்கப் பட்டிருக்கிறது. கணித சாஸ்திரம், வான சாஸ்திரங்கள் படிக்கும் ஐரோப்பியர், அமெரிக்க மாணவர்கள், பள்ளிக்கூடப்படிப்பு முடிந்தவுடன் ஒரு வருஷம் இவ்விடம் வந்து பயிற்சி பெற்றுப் போவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர்.

அவர்களில் ஜர்மன் தேச மாணவருடன், சூரியன் நாடோறும் மாறும் வர்ணங்களைக் குறித்துப் படவுதவியுடன் நான் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது இதற்கு அடுத்தது உருக்கின தங்க வர்ணம் நாளைக்குப் படத்தில் வருமென்று நான் சொன்னவுடன் அவருக்கு ஆச்சரிய முண்டாயிற்று. "எப்படி ஐயா, தங்களுக்கு இவ்வளவு நிச்சயமாய்த் தெரியும்?" என்று என்னைக் கேட்டார். உடனே நான், உத்தராயண முதலில் தாமிர வர்ணமும், பிறகு அருணம், அப்புறம் பப்புரு

நிறம், கடைசியில் ஸுமங்கல் (உருக்கின தங்க வர்ண) மென்று ஸ்ரீ ருத்திரத்தில் கூறியிருப்பதைச் சொன்னேன். உடனே அம் மாணவர் வியப்புற்ருர். ருக் வேதத்தில் சூரியனுக்குத்தக்க வர்ணத்திற்கு மேலான வெண்மை நிறத்தை வர்ணிக்கவில்லை என்பது ஆர்க்டிக் பிரதேச சூரியனைக் குறிப்பதாகும். இதற்கு நேரே வடக்கில் "மேருநுனி" இருக்கிறது. இந்த இடத்திலிருந்துதான் பௌதிக நூல் வல்லார் மேரு நுனியைக் காணப் போய்க் காலமடைந்தார்கள். அவர்களது யந்திரம் முதலியவைகளை ஞாபகார்த்தமாக இவ்வூர்க் கோவிலில் வைத்திருக்கிருர்கள்.

இது முதல் வடக்கே சென்ருல் அவிச்சின்ன சூரியனைப் பார்க்கலாம். ஆகையால் "உதயாஸ்தமனம் இல்லாத" சூரியனைச் சில விரதக்காரர் உபாசிக்க வேண்டுமென்று வேதத்தில் கூறியதை அனுஷ்டிக்க விரும்பினுல் அவர்கள் இந்த ஸ்தானத்தை அடைய வேண்டும்.

என் வாழ்நாள் முழுதும் கண்ணுக்குக் கண்ணுடியில்லாமலும், கண்ணுடி போட்டுக் கொண்டிருப்பவர்களை யோகப் பயிற்சியின் பலனுக எடுக்கும்படியும் செய்திருப்பதுண்டு. நாம் அதை உபயோகியாததினுல் ஸம்ஸ்கிருதத்தில் கண்ணிலணியும் கண்ணுடிக்குப் பெயர் இல்லை. நாள்தோறும் சுமார் பத்து மணிவரை பகலில் ஏட்டுச் சுவடியிலுள்ள சிறிய எழுத்துக்களைப் படித்துக் காலங்கழித்து வருவேன். ஒருநாள் பகலில் சூடான ஓரிடத்தில் ஏட்டுப் பிரதியை ஆராய்ந்து படித்துக் கொண்டிருக்கும்பொழுது சூரிய ஒளி மூளையில் (ஸன் ஸ்ட்ரோக்) விழக் கண்களுக்குக் கெடுதல் நேர்ந்தது. கர்ம விபாக சாஸ்திரப்படி உதயாஸ்தனமில்லாத சூரியனைத் தரிசித்து அவனைப் பார்த்துக்

கொண்டே சூர்ய அஷ்டாத்ரத்தை சில ஆயிரம் ஜபித்துப் பிறகு ஸ்ரீ ருத்திரத்தினுலும், "வயஸ் ஸுபர்ணு" என்கிற மந்திரத்தினுலும் புரச்சரணை செய்து விரத சமாப்தி செய்வதாக சங்கல்பித்தேன். உடனே யாத்திரையை ஆரம்பித்து ஆர்க்டிக் பிரதேசம் வந்தேன்.

நாள் தோறும் கப்பல் எஜமானனைப் பார்த்து, "ட்ரோம்ஸோ போனவுடன் சூரியன் மேகத்தாலும், பனிமழைகளினுலும், மறைபடாமல் எனக்கு தரிசனம் கிடைக்குமா?" என்று ஆவலுடன் கேட்பேன். அப்பொழுதெல்லாம் அவரும் கப்பலில் அமைத்திருக்கிற யந்திரத்தைப் பார்த்துக்கொண்டே கால நிலைமையை முன்னே யறிந்து சொல்ல முடியாதென்று கூறுவார்.

நானே இந்தியாவிலிருந்து சுமார் 8000 மைல் வரை யாத்திரை செய்து பெருஞ் செலவில் அதை நிறைவேற்றப் போனவன். "அவிச்சின்ன சூரிய" தரிசன மில்லாமல் திரும்பினுல் இதைவிட மனே துக்கம் எனக்கு வேறு என்ன வேண்டும்? எனக்காகக் கப்பலை நிறுத்த முடியுமா?

ஒரு நாள் மாலை என் மனத்தில் ஈசுவர கிருபையினுல் ஒன்று தோன்றிற்று. அதாவது சூரியனை நினைத்து, "சூரியனே! நீ நாளை முதல் மூன்று தினங்கள் மேகம் முதலியவற்ருல் மறையாமல் தரிசனம் கொடுத்து என் விரதத்தை முற்றுப் பெறச் செய்யாவிடில் என் சாபத்துக்கு உட்பட நேரும். ஈசுவராதிகளெல்லாம் பக்தர் சாபத்தால் தசாவதாரம் எடுக்க நேர்ந்ததை ஞாபகப்படுத்துகிறேன்" என்று சொல்லிவிட்டு என் அறைக்குள் போய் சிரம பரிகாரம் செய்துகொண்டேன்.

சில மணி நேரத்துக்கெல்லாம் கப்பல் தலைவன் என்னிடம் ஓடிவந்து "சூரியன் இனிப் பிரகாசமாகு வான்; யந்திரமும் அப்படியே தெரிவிக்கிறது. தாங் களும் விரதத்தை நிறைவேற்றலாம்" என்று சொன் ஞன். நான் அவரை ஒரு தேவ தூதனுக நினைத்து உடனே விரதத்தை மேற்கொண்டேன்.

கப்பல் போகக் கூடிய "வடக்கு முக்கு" என்று ஓர் இடம் இருக்கிறது. அதை யடைந்த பிறகு கொஞ்சம் தென் கிழக்காகக் "கர்கிஸ்" என்ற சிற்றூர் போய்ச் சேரவேண்டும். அதுதான் யாத்திரா முடிவு இடம். இவ்விடத்தில் நிலக்கரி கிடைக்கிறது. ஆகை யால் ஒரு காலத்தில் இந்த இடம் நம் தேசம் போல அதிக வெப்பமுள்ளதாய் மரம் செடிகள் நிரம்பப்பெற்று பூகம்பம் முதலானவற்ருல் அழிந்து ஆயிர வருஷக் கணக்காக அப்படியே யிருந்திருக்க வேண்டுமென்று நம்பலாம்.

சில காலங்களில் வருஷம் பூராவும் சூரிய ஒளி யின்றி பனி மழையால் உணவுக்கு வேண்டிய பயிர் முதலாயின உற்பத்தியாகாமல் போனதிஞல் நம் முன்ஞேர் இதைவிட்டுத் தெற்கே சென்ருர்கள் என்று சாந்தோக்கிய உபநிஷத்தில் முதல் அத்தியாயத்தில் கூறியிருக்கிறது.

வடக்கு நுனியிலிருந்து மேற்கு நுனிக்கு சுமார் 190 மைல் இருக்கிறதென்று ஆராய்ச்சியாளர் சொல்லு கிருர்கள். அந்த இடம் எப்படி யிருக்கிறதென்பதைப் பார்க்க அறிஞர்களால் முடியவில்லை. ஆகாய விமான மாவது, கப்பலாவது அவ்விடம் போக வியலவில்லை. மேரு நுனியை நெருங்கின விமானமும், கப்பலும் கிழக்கே யிழுக்கப்பட்டு, சுமார் 500 மைலுக்கு அதிக தூரத்தில் தள்ளப்படுகின்றன.

(வடக்கே காட்டுகிற முள்ளை) நீங்கள் சாதாரண மாகப் பார்த்திருப்பீர்கள். மேரு நுனிக்குப் போனால் அந்த முள் எந்தப் பக்கம் திரும்புகிறதென்று தெரிய வேண்டும். இதுதான் ரகஸ்யம் இந்த வடக்கு நுனி யிலிருந்து கொஞ்ச தூரத்தில் வட மேற்காக "ஸ்விஸர்பர்கு தீவு" இருக்கிறது. அவ்விடத்திலிருந்து மேரு நுனி சுமார் இருநூறு மைலுக்குள்ளேயே இருக் கக்கூடும். அங்கிருந்து மேரு நுனிக்குப் போனாலும் முன் நேர்ந்த கதிதான். ஆண்டு தோறும் உத்தரா யணத்தில் மேல்நாட்டுப் பேரறிஞர் பலர் முயற்சி செய்துகொண்டே வருகிறார்கள். ஏதாவது ஒரு தடை நேருகிறது.

அதனாலேயே தைத்திரிய ஆரணத்தில் ஒரு ரிஷி மற்றொருவரைப் பார்த்து, "நான் மேருவைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேனே ஒழிய பார்த்ததில்லை" என்றார்.

அதற்கு மற்றொருவர், "நான் நேரே பார்த்தேன்" என்றார்.

அவர் மகான்; நாம் மனிதர்; ஆகையால் மேரு வைப் பார்க்க முடியாது. நான்கு தினங்களில் சூரியனைத் தரிசித்து ஜபம் செய்து திரும்பவும் ட்ரோம்ஸோவுக்கு வந்தேன்.

—"மகா மேரு யாத்திரை"

———

வீரச் செயலை விட துன்பம் சகிக்கும் சக்தியே உயர் குணத்திற்குரிய சிறந்த சோதனையாகும்.

— ஆவ்பரி

# கர்ம வீரர் கென்னடி.

க. வெங்கடேசன்.

ஜான் பிட்ஜெரால்டு கென்னடி 46 வது வயதிலேயே அமெரிக்காவின் 35வது ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். இவ்வளவு இளவயதில் இதற்குமுன் அந்நாட்டில் யாரும் இந்த உயர் பதவிக்கு வந்ததில்லை! கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்த ஒருவர் இப்பதவிக்கு வந்ததும் இது தான் முதல் முறை. கென்னடி 1036 நாட்கள் தான் ஆட்சி செய்தார்.

கென்னடியின் மூதாதையர் அயர்லாந்திலிருந்து குடிபெயர்ந்து வந்து அமெரிக்காவில் இடியேறியவர்கள். பத்தொன்பதாம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் அயாலாந்தில் கடுமையான பஞ்சம் ஏற்பட்டது. அக்கொடிய பஞ்சத்திலிருந்து தப்பி வந்தவர்களுள் ஒருவரே பாட்ரிக் கென்னடி என்ற இளைஞர். இவர் பாஸ்டனில் உள்ள நீடில்ஸ் என்ற தீவில் வந்து குடியேறினுர்.

ஜான் கென்னடியின் கொள்ளுத் தாத்தாவான பாட்ரிக் கென்னடி நீடில்ஸ் துறைமுகத்தில் வேலை ஏற்றுக் கடுமையாக உழைத்தார். ஒரு ஐரிஷ் மாதை மணந்தார். நான்கு குழந்தைகள் பிறந்தன. கடைசி குழந்தைக்குப் பாட்ரிக் ஜே. கென்னடி என்று பெயரிட்டார். இவர்தான் ஜான் கென்னடியின் தாத்தா. மதுப் பழக்கமில்லாத இவர் மது வியாபாரம் செய்து பெரும் பொருள் ஈட்டினுர். சமூக செல்வாக்கு பெற்றுர். அரசியல் வாதியானுர்.

இவரது மூத்த மகன் ஜோசப் பாட்ரிக் கென்னடி. ஜான் கென்னடியின் தந்தை. இவர் பாஸ்டனில் இருந்த மற்றொரு பிரபல அரசியல் வாதியான ஜான். எப்.பிட்ஸ்ஜெரால்ட் என்பவரின் மகளான ரோஸ் என்பவரை மணந்து கொண்டார். இவர்களுக்கு ஒன்பது குழந்தைகள் : ஐந்து பெண்கள்; நான்கு பையன்கள்! 1917இல் பிறந்த இரண்டாவது மகன்தான் ஜான் கென்னடியாவார்.

## அரசியல்

ஜான் கென்னடி அரசியல் சூழ்நிலையில் பிறந்து வளர்ந்தவர். பிறப்பிலிருந்து அரசியல் பயிற்சி பெற்றவர். இவரது குடும்பமே ஒரு அரசியல் குடும்பம் எனலாம். இரண்டு தலைமுறைகளாகக் கென்னடி குடும்பம் அரசியலில் தீவிரமாக ஈடுபட்டிருந்தது. ஜான் கென்னடியின் தந்தை வழித் தாத்தாவான பார்ரிக் ஜே. கென்னடி பாஸ்டன் அரசியலைக் கட்டுப்படுத்தி வந்தத் தலைவர்களுடன் நெருங்கிப் பழகியவர். ஜனநாயகக் கட்சியின் செல்வாக்குமிக்க உறுப்பினர். மாநில சட்டமன்றத் தேர்தலில் பல முறை வெற்றி பெற்றார்; மேலவையிலும் இடம் பெற்றார்.

கென்னடியின் தாய்வழித் தாத்தாவான ஜான். எப். பிட்ஸ்ஜெரால்டும் செல்வாக்கு மிக்க அரசியல் வாதியாக விளங்கியவர். பார்ரிக் கென்னடியின் நெருங்கிய நண்பர். பாஸ்டன் நகர மேயராயிருந்தவர்.

கென்னடியின் தந்தையான ஜோசப் கென்னடி தனது குடும்ப அரசியல் பாரம்பரியத்தை அறுபடாமல் காப்பாற்றினார். ஹார்வர்டு பட்டதாரியான இவர், பாங்க் அதிபராகிப் பெரும் பொருள் ஈட்டியதோடு

நிற்காமல் தேசிய அரசியலிலும் பங்கேற்ருர். அன்ருள் அமெரிக்க ஜனதிபதியாயிருந்த பிராங்ளின் ரூஸ் வெல்ட்டின் நெருங்கிய நண்பர்களில் ஒருவராய்த் திகழ்ந்தவர். அமெரிக்கத் தூதுவராகப் பிரிட்டனில் பணியாற்றியவர்.

அரசியல் செல்வாக்கும், பொருட் செல்வமும் மிக்க குடும்பத்தில் பிறந்த ஜான் கென்னடிக்குச் சிறந்த கல்வி பெறுவதற்கான ஏற்பாடு செய்யப்பட்டது. தனது துவக்கக் கல்வியைப் புரூக்ளினில் பெற்ருர். பின்னர்; நியூயார்க்குக்கு அண்மையிலுள்ள ரிவர் டேலிலும், கனெக்டிகட் நகரிலுள்ள காண்ட்டர் பரிப் பள்ளியிலும் பயின்ருர். அதன் பின் சோட் (Choate) பள்ளியில் தனது உயர் நிலைப்பள்ளிப் படிப்பை முடித்தார்.

தனது பதினெட்டாவது வயதில் பிரின்ஸ்டன் பல்கலைக்கழகத்தில் சேர்ந்தார். உடல்நலக் குறைவால் படிப்பை நிறுத்த வேண்டியதாயிற்று. பின்னர் தன் தந்தை பயின்ற ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் சேர்ந்தார். ஒரு கோடை பொருளாதாரப் பள்ளியில் சேர்ந்து புகழ் மிக்க சோஷலிச மேதையான ஹெரால்டு ஜே. லாஸ்கியின் மாணவரானுர்; பல தீவிர சிந்தனையாளர்களின் செல்வாக்குக் குள்ளானுர். லண்டனிலிருந்து திரும்பிய கென்னடி ஹார்வர்டில் அரசியல், வரலாறு, பொருளாதாரம் ஆகிய பாடங்களைக் கற்ருர். ஹானர்ஸ் பட்டம் பெற்ருர்.

இரண்டாம் உலகப்போர் தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. 1943 ஆம் ஆண்டு அமெரிக்கா போரில் ஈடுபட்டது நாட்டுப்பற்று மிக்க வீரர் கென்னடி போர்ப்பணி செய்ய விரும்பினுர் கடற்படையில் சேர விண்ணப்பித்தார். ஆனுல், இவருடைய

விண்ணப்பம் நிராகரிக்கப்பட்டது. ஏன்? உயர் நிலைப் பள்ளியில் படிக்கையில் கால் பந்தாட்டத்தில் இடறி விழுந்ததால் பழுதுபட்ட இவரது முதுகெலும்பு இராணுவத்தில் சேரத் தடையாக இருந்தது. உடற்பயிற்சி வல்லுனர்களையும், மருத்துவர்களையும் கலந்தாலோசித்தார் கென்னடி. தொடர்ந்து உடற்பயிற்சி செய்து உடலை வலுப்படுத்தினுர். மீண்டும் விண்ணப்பித்தார். முயற்சி வீண்போகவில்லை. கடற்படையில் சேர்ந்தார். துவக்கத்தில் கடற்படைத் தளங்களில் ஓரிடத்தேயமர்ந்து செய்யக் கூடிய வேலைகளைச் செய்துவந்தார். அதில் திருப்தியடையவில்லை கென்னடி. தனது ஊக்கத்தாலும், விடா முயற்சியாவும், ஆற்றல்திறனுலும் பி. டி. 109 என்ற கண்காணிப்புப் போர்ப்படகின் தலைவரானுர்.

1943 ஆம் ஆண்டு ஆகஸ்டுமாதம் தென் பசிபிக்கில் உள்ள சாலமன் தீவுகளில் ஜப்பானியர்களுக்கெதிராகக் கண்காணிப்பு வேலையில் ஈடுபட்டிருந்தார் கென்னடி. ஒரு நாள் நள்ளிரவில் 'அமாகிரி' (Amagiri) என்ற ஜப்பானிய நாசகாரக் கப்பல் கென்னடி செலுத்திச் சென்ற போர்ப்படகின் மீது மோதி நொறுக்கியது. கென்னடியும் அவரது சகாக்களும் படகிலிருந்து தூக்கியெறியப்பட்டனர். கென்னடிக்கு முதுகில் பலமான அடிபட்டது.

கடல் நீர் கப்பலிலிருந்து சிதறிய எண்ணெயால் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது! இருவர் இறந்தனர். பிற மாலுமிகள் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தனர். அவர்களெல்லாம் உடைந்த கப்பலைப் பற்றிக் கொள்ள துணை செய்தார் படைத்தலைவர் கென்னடி. படுகாய முற்றிருந்த மக்மகானின் நிலை கவலைக்கிடமாயிருந்தது. உயிர்ப் பாதுகாப்புக் கச்சை (Life

Jacket Belt) ஐ வாயில் கௌவிக் கொண்டு, மக்மகானை முதுகில் சுமந்து கொண்டு ஐந்து கிலோ மீட்டர் நீந்திச் சென்று ஒரு தீவின் கரையை அடைந்தார் கென்னடி. அப்போது கென்னடி காட்டிய அசாதாரணமான விரம், தீரம், துணிவு, புத்திசாதுர்யம், தலைமைப்பண்பு, செயலாற்றல் ஆகியவை போர் வீரத்திற்கான பிரத்யட்ச எடுத்துக் காட்டுகளாகும்.

கப்பற் படைத் தளத்தில் இருந்த அதிகாரிகள் பி. டி. 109 படகில் இருந்தோர் இறந்துவிட்டதாக எண்ணி ஈமச்சடங்குகளையும் செய்து விட்டனர்! பின்னர்க் காலனைக் கண்டு திரும்பிய கென்னடியை 'பர்ப்பிள் ஹார்ட்' என்ற பட்டத்தையும், கடற்படைப் பதக்கத்தையும் கொடுத்து கவுரவித்தனர். "கென்னடியின் அஞ்சாமை, துன்பங்களை சகித்துக் கொள்ளும் ஆற்றல், சிறப்பான தலைமை போன்ற பண்புகள் அமெரிக்கக் கப்பற்படையின் உயர்ந்த மரபுக்குச் சிறந்த அறிகுறிகளாக இருந்தன "என்று பாராட்டப் பட்டார்.

ராபர்ட் டோனோவான் என்பவர் இந்தத் தீரச் செயலைப்பற்றி ஒருபுத்தகம் எழுதுவதற்குக் கென்னடியிடம் அனுமதி கேட்டார். கென்னடி என்ன சொன்னார் தெரியுமா? "புத்தகம் எழுதுவதற்கான கதை எதுவும் இதில் இல்லையே. காலத்தை விரயம் செய்யாதீர்கள்" எனக் கூறி அவரது ஊக்கத்தைக் குறைத்தார். எனினும் டோனோவான் சாலமன் தீவுகளுக்குச் சென்று, கென்னடி காலனைச் சந்தித்த இடத்தைப் பார்வையிட்டு, அவர் நீந்திக்கடந்த இடத்தில் நீந்திப் பார்த்து, உள்ளத்தை உருக்கக் கூடியமுறையில் அருமையான நூலொன்றை எழுதியுள்ளார்.

1945 ஏப்ரல் மாதம் கடற்படையிலிருந்து விலகினார் கென்னடி. பத்திரிகைகளுக்கு எழுதும் பொறுப்பை மேற்கொண்டார். அந்த ஆண்டில் தான் ஐக்கிய நாடுகள் சபையை அமைப்பதற்காக சான் பிரான்சிஸ் கோவில் ஒரு மாநாடு கூடிற்று. ஹேர்ஸ்ட் (Hearst) பத்திரிகை நிறுவனத்துக்காக எழுதுவதற் காக அங்கு சென்றார்.

தனது திறமையை, உள்ளத்தை உறுத்திக் கொண்டிருந்த குறிக்கோளைப் பத்திரிகைப் பணியோடு நிறுத்திக் கொள்ள விரும்பவில்லை கென்னடி. மாநாட்டுக்கு வெளியே இருந்து கொண்டு, மாநாடு பற்றிப் பத்திரிகைகளுக்கு எழுதுவதைவிட மாநாட்டில் கலந்து கொள்ளும் தகுதியைப் பெறுவதே சிறந்தது என்பதைக் கென்னடி உணர்ந்தார். அதற்கு என்ன வழி? அரசியலில் ஈடுபட்டு அமெரிக்கக் காங்கிரசுக்குச் செல்வதென முடிவு செய்தார். பாஸ்டன் திரும்பினார். பதினோராவது காங்கிரஸ் தொகுதியில் போட்டி யிட்டார். "பணக்காரப் பையன். அரசியல் ஆழம் தெரியாது காலை விடுகிறான். ஐயோ பாபம்!" என்று அனுபவஸ்தர்களும் முதியோரும் கூறினர். தனது அறிவாற்றலையும், திறமையையும் ஒன்று சேர்த்து. ஊக்கத்தோடு கலந்த உழைப்பாலும் விடாமுயற்சி யாலும் கென்னடி வெற்றி பெற்றார் (1946). 29 வயதான அவரது வெற்றி பல அரசியல் ஆருடக் காரர்களுக்கு அதிர்ச்சியைத் தந்தது! கென்னடியின் இந்த வெற்றி அவரது உழைப்புக்குக் கிடைத்த ஊதிய மாகும்.

அமெரிக்கக் காங்கிரசின் கீழவையான பிரதி நிதிகள் சபைக்குள் கென்னடி முதன் முறையாக நுழைந்தபோது அங்கிருந்தோர் அந்த இளைஞனைப்

பார்த்துத் தங்களது புருவங்களை உயர்த்தினர். பின்னர் சிலர் புருவங்களை நெறித்தனர். வேறு சிலர் வியப்படைந்தனர். ஆண்டுகள் போகப்போகப் பலர் கென்னடியைப் புகழ ஆரம்பித்தனர். கென்னடி ஜனநாயகக்கட்சி உறுப்பினராயிருந்தாலும் அக்கட்சி வட்டத்துக்குள் மட்டும் அவர் செயல் படவில்லை. தேசநலனே அவருக்குப் பிரதானமாக இருந்தது. கென்னடி தனக்கென ஒரு தகுதியையும், இடத்தையும் வகுத்துக் கொண்டார்.

1948 இல் பாஸ்டன் மேயராக இருந்த கர்லே (Curley) என்பவர் மீது ஊழல் குற்றம் சாட்டப்பட்டு சிறைவைக்கப் பட்டிருந்தார். அவரை மன்னிக்கக் கோரி பிரதிநிதிகள் சபையிலிருந்த மசாசுசெட்ஸ் உறுப்பினர்கள் ஜனாதிபதி ட்ருமனுக்கு விண்ணப்பித்தனர். இம் முயற்சிக்கு ஆதரவளிக்குமாறு கென்னடியை அவர்கள் கேட்டுக் கொண்டனர். பாஸ்டனைச் சேர்ந்த கென்னடி என்ன செய்தார்? தான் சேர்ந்த மாநில நலனைக் கவனிப்பதா? கட்சிக் கட்டுப்பாட்டுக்கு உள்ளாவதா? அவர்களது முயற்சி நியாயமற்றது என்பதால் அதை ஆதரிக்க உறுதியுடன் மறுத்துவிட்டார்.

பிரதிநிதிகள் சபையில் ஆறு ஆண்டுகள் பணியாற்றினார். இதற்கிடையே பாஸ்டன் மேயராகுமாறு கென்னடிக்கு அவரது நண்பர்கள் யோசனை கூறினர். கென்னடி அதற்கு செவி சாய்க்கவில்லை. இரண்டாண்டுகளுக் கொருமுறை தேர்தலில் நிற்பதையும் விரும்பவில்லை அவர். பிரதிநிதிகள் சவை குறுகிய செயல் எல்லையாக அவருக்குப்பட்டது. ஆறு ஆண்டுகளுக்கொருமுறை தேர்தல் நடக்கும் செனட்டுக்குச் சென்று தனது நடிவடிக்கைகளை விரிவுபடுத்த விரும்பினார் கென்னடி.

மசாசுசெட்சின் செனட் பிரதிநிதியாக இருந்த ஹென்றி காபட் லாட்ஜ் ஜூனியரை எதிர்க்கத் தீர்மானித்தார். கென்னடி குன்று முட்டிய குருவியாவார் எனப் பலரும் கருதினர். லாட்ஜ் அரசியல் கலையில் கைதேர்ந்தவர்; பிரசாரப் புலி; அனுபவ மேதை. கென்னடி தனக்கேயுரிய தைரியத்தோடும், துணிவோடும், வேகத்தோடும் தேர்தலில் ஈடுபட்டார். 1926 ஆம் ஆண்டு கென்னடியின் தாய்வழித் தாத்தாவான ஜான். எப். பிட்ஜெரால்ட் அப்போது புகழ் பெற்றிருந்த ஹென்றி காபட் லாட்ஜ் சீனியரை (கென்னடியை எதிர்த்த லாட்ஜின் தாத்தா) எதிர்த்து செனட்டர் பதவிக்கும் போட்டியிட்டுத் தோல்வி கண்டார். இப்போது அவர்களது பேரன்கள் தேர்தல் களத்தில் சந்தித்தனர். விளைவு என்ன? கென்னடி லாட்ஜ் பெற்றதைவிட 70,000 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி வாகை சூடினர்! (1952 நவம்பர்) செனட்டரான நான்காண்டு காலத்திற்குள் அவர் சார்ந்திருந்த ஜனநாயகக் கட்சியில் தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவரானர்.

கென்னடி படிப்பிலும், போர்ப்பணியிலும், அரசியலிலும் தீவிரமாக ஈடுபட்டிருந்தமையால் அவருக்கு வயது 36 ஆகியும் தன் திருமணத்தைப் பற்றிக் கவலைப்படாமல் இருந்தார். நண்பரொருவர் ஒருநாள் குமாரி ஜாக்குலின் லீ பொவியரை செனட்டர் கென்னடிக்கு அறிமுகம் செய்து வைத்தார். படிப்பு, பணம், அறிவு இம் மூன்றும் ஒருங்கேயமையப் பெற்றவள் ஜாக்குலின். பிரெஞ்சு, ஸ்பானிய மொழிகள் இவருக்கு நன்கு தெரியும். குதிரை ஏற்றத்தில் நல்ல பயிற்சி உண்டு. ஓவியம் வரைதல், கவிதை இயற்றல், புகைப்படம் எடுத்தல் இவருடைய பொழுதுபோக்கு. வாஷிங்டன் டைம்ஸ் ஹெரால்டு என்ற

பத்திரிகைக்கு எழுதி வந்தார். இத்தகைய ஆற்றல் மிக்க ஜாக்குலினை 1953 செப்டம்பர் 12 ஆம் தேதி செனட்டர் கென்னடி மணந்து கொண்டார்.

வேதனை

ஆனால், கென்னடிக்கு இளமையிலிருந்து தொல்லை கொடுத்துக் கொண்டிருந்த முதுகுவலி அதிகரிக்கத் தொடங்கியது. வலி பொறுக்க முடியாமல் போனதால் அவருக்கு இருமுறை அறுவை சிகிச்சை செய்ய வேண்டியதாயிற்று தாங்கொணாத் துன் பத்தைப் பொறுமையுடன் ஏற்றார். சில மாதங்கள் ஊன்றுகோல் துணைகொண்டு நடந்து வந்தார். ஒரு நாள் ஊன்றுகோல் முறிந்து கீழே விழுந்தார். அடி பட்டது. மீண்டும் படுக்கையில். இத்தகைய உடல் துன்பத்தின் நடுவேதான் 'தீரர்களின் வரலாறு' (Profiles in courage) என்ற அருமையான நூலை எழுதி முடித்தார். அஞ்சா நெஞ்சுடன் கொண்ட கொள்கை களுக்காக, தீரத்துடன் போராடிய அரசியல் வீரர் களின் வாழ்க்கை வரலாறே அந்நூல்.

1956 ஆம் ஆண்டு கென்னடியின் வாழ்க்கையின் முக்கியமான காலகட்டமாகும். அந்த ஆண்டு நடை பெற்ற ஜனாதிபதித் தேர்தலில் ஜனநாயகக் கட்சியின் சார்பாக ஸ்டீவென்சன் தலைவர் பதவிக்குப் போட்டி யிட்டார்; உதவி ஜனாதிபதிப் பதவிக்குக் கென்னடி யும், கெபாவர் (Estes Kefauver) என்பவரும் போட்டி யிட்டனர். கட்சிக்குள் நடந்த இப்போட்டியில் கென்னடி தோற்றார். இத்தோல்வி கண்டு கொஞ்ச மும் மனம் தளரவில்லை; உறுதி குறையவில்லை. தோல்வியிலும் கென்னடியின் பெருந்தன்மையும், நம்பிக்கையும் பிரகாசித்தன.

## வெற்றி

1960 ஆம் ஆண்டு நடந்த ஜனாதிபதித் தேர்த லுக்காகக் கட்சித் தேர்வில் போட்டியிட்டார். வெற்றி பெற்றார்! அவ்வாண்டு நவம்பர் எட்டாம் தேதி ஜனாதிபதித் தேர்தல். கென்னடிக் குழு முழு மூச் சுடன் தேர்தல் ஏற்பாடுகளில் ஈடுபட்டது. கென்னடி சூறாவளி சுற்றுப் பயணத்தை மேற்கொண்டார். அவரது பேச்சுப் பிரவாகம் கரைபுரண்டோடியது. அமெரிக்கா புதுப்பாதையில், பீடுநடை போட்டு புது உலகு நோக்கிப் போக வேண்டுமென கென்னடி கர்ஜித்தார். அவரது போக்கை, பேச்சை அமெரிக்க நாடு கூர்ந்து கவனித்தது, கேட்டது.

கென்னடிக்கு எதிராக சில வாதங்கள் எழுப்பப் பட்டன. அவர் ஒரு கத்தோலிக்க மதத்தைச் சேர்ந் தவர். இதற்குமுன் இம்மதத்தைச் சேர்ந்த எவரும் ஜனாதிபதியானதில்லை. மேலும், கென்னடி ஒரு கோடீஸ்வரர். இவரால் அமெரிக்க ஏழைகளுக்கும், கீழ்த்தட்டு மக்களுக்கும் பயன் ஏற்படாது. அதோடு கென்னடி ஒரு ஐரிஷ்காரர். யாவற்றுக்கும் மேலாக அவர் ஒரு இளைஞர், போதிய அனுபவமில்லாதவர்; நாட்டை நடத்திச் செல்வதற்கான வயது முதிர்ச்சி அவருக்கில்லை. இதுபோன்ற எதிர்ப்புகள்! எனினும், நாடு அவரை நாடியது; நம்பியது; ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுத்தது. 1961 ஜனவரி 20 ஆம் தேதி, தமது 44-வது வயதில் அமெரிக்காவின் 35-வது ஜனாதிபதி யாகப் பதவி ஏற்றார் கென்னடி.

ஜனாதிபதி கென்னடி 1036 நாட்கள் ஆட்சி செய் தார். இக்குறுகிய ஆட்சிக் காலத்தில் நல்ல பல நாட்டுப் பணிகளை மேற்கொள்வதற்கான கரள்கோள்

களை வென்றினுர். அடித்தளம் அமைத்தார். நீக்ரோக் களின் மனித உரிமைகள்; முதியோர் மருத்துவ வசதி; கல்வி விஸ்திரிப்பு; பொருளாதார கட்டுக்கோப்பு போன்றவற்றுக்கான பல திட்டங்களை மிகுந்த எதிர்ப்புக்களுக்கிடையே விரைவுபடுத்தி வந்தார். அதேபோன்று வெளிநாட்டு விவகாரங்களில் அமை திப்படை (Peace Corps), முன்னேற்றத்துக்கான நேச உடன்பாடு அணு ஆயுத சோதனை நிறுத்தம், அமை திக்கு உணவு போன்ற திட்டங்கள் பாராட்டுக் குரியவை. லாவோசில் ஏற்பட்ட உள்நாட்டுப் போர், பெர்லின் நெருக்கடி, க்யூபா நெருக்கடி, காங்கோ குழப்பம் போன்றவை கென்னடிக்குப் பெரிய சவால் களாயிருந்தன.

நாட்டு மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றும் பணியில் ஈடுபட்டிருந்த ஜான் பிட்ஜெ ரால்டு கென்னடியை 1963 நவம்பர் 22ஆம் தேதி வெள்ளிக்கிழமை டல்லாசில் கொடியவனொருவன் சுட்டுக் கொன்று விட்டான்! நாதம் பாதியில் நின்றது ஓவியம் எழுதி முடிக்கப்படவில்லை. கென்னடியின் வாழ்க்கை முற்றுப்பெருக் கவிதையாயிற்று. கடமை வீரர் கென்னடியின் தொண்டுப் பயணம் பூர்த்தியடை யாமலே போயிற்று!

---

சோம்பேறித்தனம் மெதுவாக நகர்கிறது; ஏழ்மை வெகு விரைவில் அதை வென்று விடுகிறது.

—செக்கர்

# கொய்த மலர்கள்

---

ஒரு மனிதனின் மதம் அவன் ஒட்டிக் கொள்ளும் விலாசத்தையே பொறுத்த தென்றால், அந்த மதம் மதமே யல்ல.

—கபீர்

நியாயத்தின் பொருட்டு வெளிப்படையாக ஒருவருடன் வாதிப்பது சிறப்பாம்.

—காம்பெல் தாமஸ்

நல்ல விஷயங்கள் தீய விஷயங்கள் என்று பிரிக்க முடியாது.

நாம் அவற்றின் வசப்படாமல், அவை நம் வசம் வந்து விட்டால் எல்லாம் நல்ல விஷயங்களே.

—எட்வர்டு கார்ப்பெண்டர்

ஆயுதங்களும், வாத்தியங்களும், பூமியும், பெண்களும், யோக்கியர்களும், சாஸ்திரங்களுமாகிய இவைகளுடைய பயனோ,பயனற்ற தன்மையோ பரிபாலனம் பண்ணுகிறவர்களின் பேதத்தாலே உண்டாகிறது.

—பஞ்சதந்திரம்

தன்னை ஒதுக்கும் தியாகம்—இதுவே இறைவன் மனிதனுக்கு அருளியுள்ள தலைசிறந்த ஞானமாகும்.

—கார்லைல்

பழி வாங்குதல் என்னும் கடனைத் தீர்ப்பதில் அயோக்கியர்கள் யோக்கியர்களாயு மிருப்பார்கள், காலமும் தவற மாட்டார்கள்.

—கோல்டன்

அன்னை—உலகில் புனிதத்திலும் புனிதமான பொருள் அவளே.

—சாமுவேல் டெயிலர்

இவ்வுலகில் எந்தக் காலத்தும் பகைமை பகைமை யால் தணிவதில்லை; பகைமை அன்பினாலேயே தணியும், இதுவே பண்டை அறநெறி.

—புத்தர்

வாங்குகிற வர்களிடம் நல்ல பொருளைக் காண் பித்து, விற்கும் பொழுது மட்டச் சரக்கைக் கொடுக்கும் வியாபாரியைத் தண்டிக்க வேண்டும்.

- ஸ்ம்ருதி

புத்தகங்களில் உள்ள விஷயங்கள் மேலானவை யாய் இருந்த போதிலும், அவற்றைப் படிப்பதனு லேயே ஒருவர் எக்காலத்திலும் சந்தோஷமா யிருக்க முடியாது.

— ஜார்ஜ் கிரேப்பி

மன நிம்மதியுடனும், உடல் நலத்துடனும், அன்றைக்குத் தேவையான ஆகாரத்துடனும் காலை யில் எழுந்திருப்பவன் உலகத்தையே பெற்றுக் கொண்டவனைப் போலாவான்.

—நபிகள் நாயகம்

அனைவரையும் ஒன்று போல் புகழ்வது யாரையும் புகழாதிருப்பதே யாகும்.

—ஜான் கே

கெட்ட காலம் மேன்மையை வெளிப்படுத்தும், நல்ல காலம் அதனை மறைக்கும்.

—ஹோரெஸ்

செல்வ முடையவன் இழிகுலத்துதித்த குரூபி யானாலும் உயர் குலத்திற் பிறந்த மனமத லக்ஷண முள்ளவனென்று புகழ்வார்கள்.

செல்வ மில்லாமல் வறுமைத் துன்ப மடைந்தவனை உயர் குலத்தானாயிலும், அழகிற் சிறந்த மன்மதனானாலும் புலையனை வெறுத்தல் போல் வெறுப்பார்கள்.

—கவி வேமண்ணா

கல்வியின் இலக்கியம் நல்ல காரியங்களைச் செய்யக் கற்றுக் கொடுப்பதன்று; நல்ல காரியங்களைச் செய்வதில் ஆசையும் ஆனந்தமும் உண்டாக்குவதே யாகும்.

—ரஸ்கின்

குங்குமம் சுமந்த கழுதைபோல வாழ்வதும் ஒரு வாழ்வாகுமா?

—ராமலிங்க அடிகள்

கெட்ட காலத்தில் துன்பம் மனதைக் கலக்க விடாதே, நல்ல காலத்தில் இன்பம் அளவு கடக்க விடாதே.

—ஹோரெஸ்

மனிதன் நன்மை, தீமை இரண்டின் தன்மைகளையும் உணர்ந்து அனுபவிக்க வேண்டியது அவசியம்.

ஒன்றை அறிந்து மற்ருென்றை அறியாமல் இருப்பது வீண் அறியாமையும், அகம்பாவமுமே யாகும்.

—ஆஸ்கார் ஒயில்டு

சூரியன் தாமரைக் குளத்தை மலரச் செய்கிருன். சந்திரன் கருநெய்தல் புஷ்பங்களை மலரச் செய்கிருன்.

கேட்காமலேயே மேகம் நீரைக் கொடுக்கின்றது. பிறர்க்கு நன்மை செய்வதில் நல்லோர்கள் தாங்களே முயற்சி யுடையவர்களாய் இருக்கிருர்கள்.

—பர்த்துருஹரி

நீ என்னை எங்கே கொண்டுபோய் விட்டாலும் சரி. என் அறிவு மட்டும் தன் இயற்கையின்படி உணரவும் நடக்கவும் கூடுமாயின், அங்கே நான் திருப்தியோடு, அதனுல் ஏற்படும் மன அமைதியோடு வாழ்வேன்.

என் ஆன்மா சோர்ந்தும், பயந்தும், துயருழந்தும் இருப்பதற்கு இடமாற்றம் காரணமாகலாமோ?

—மார்கஸ் ஔரேலியஸ்

சமய வாழ்வுக்கு இன்றியமையாது வேண்டப்படுவது மனித ஜாதியிடம் அன்பும் மரியாதையும் செய்தலே.

—அனடோல் பிரான்ஸ்

கிறிஸ்தவ மதம் அயலானுக்கு அன்பு செய்யப் போதிக்கும்.

ஆனால் தற்கால சமூகமோ அயலான் ஒருவன் உண்டு என்பதையே ஒப்புக்கொள்வதில்லை

—டிஸ்ரேலி

முரசுச் சப்தத்தை தூர இருந்து கேட்கலாமே ஒழிய அருகில் போனால் நாராசம் தான்.

—பாரசீகப் பழமொழி

பக்தி ஒன்பது வகை:

1. பக்திமான்களுடனும் பாகவதர்களுடனும் கூடி வாழ்தல்.

2. பகவான் லீலைகளின் கதைகளைக் கேட்டு ஆனந்தமடைதல்.

3. குருவின் சரணங்களை, புகழுக்கு ஆசைப் படாமல், சேவித்தல்.

4. தூய்மையுடன் பகவத் குணங்களைப் பாடுதல்.

5. வேதங்களில் கூறியுள்ளபடி, முழு நம்பிக்கையுடன் மந்திரங்களையும், பகவான் நாமங்களையும் ஜபித்தல்.

6. தன்னை அடக்கல், நல்வழியில் நடத்தல், அதிகப்படியான உலகக் காரியங்களைக் குறைத்துக் கொள்ளுதல், புண்ணிய புருஷர்களுடைய கடமைகளில் ஈடுபடுதல்.

7. உலகம் அனைத்தையும் ஆண்டவன் உருவமாக எண்ணி, அடியார்களின் தொண்டை, கடவுளிடம் உள்ள பக்திக்கு மேலானதாகக் காணுதல்.

8. கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைதல், கனவிலும் கூடப் பிறரிடம் குறை காணுமல் இருத்தல்.

9. வேஷம் போடாமல், உண்மையில் எளிய வாழ்க்கையைக் கையாண்டு, சந்தோஷமோ, துக்கமோ, ஏமாற்றமோ இல்லாமல் எப்போதும் கடவுளின் பாதங்களையே நம்பி யிருப்பது.

—துளஸி தாஸர்

யாரொருவர் தன்னைப் பற்றி மிதமிஞ்சி நினைத்துக் கொள்ளுகிருரோ அவர் வீழ்ச்சிக்கு அந்த நினைப்பே காரணம்.

—ஷேக்ஸ்பியர்

யார் நாகரிகம் உடையவர்?

தமக்கு உடை செய்யவும், உணவு செய்து வயிற்றை நிரப்பவும், உடலை அலங்கரிக்கவும் அடிமைகள் உடையவர் நாகரிகம் இல்லாதார்.

தம்முடைய முக்கியமான தேவைகளைப் பூர்த்தி செய்ய மட்டும் பணியாட்களை வைத்துக்கொண்டு அவர்க்கும் சுகவாழ்வு அளிப்பவரே நாகரிகம் உடையவர்.

—ரஸ்கின்

பெற்ருேர்கள் உயிருடன் இருக்கும்பொழுது, நெடுந்தூரம் செல்லலாகாது.

அவசியமாளுல் அவர்களுக்கு அறிவித்த பின்னர் செல்லலாம்.

—கன்பூஷியஸ்

இலைகளின்றி மரம் வளராது, அது போன்று குழந்தைகளின்றி மனிதன் வளரமுடியாது.

குழந்தைகளிடம் அன்பு காட்டாத மனிதன் மனிதன் அல்ல.

—ராஜாஜி

தீயகுணம் படைத்தவனைவிட ஆராய்ச்சியில்லாதவன் அதிகக் கேடு செய்து விடுவான்.

முதலாமவன் தன் பகைவரை மட்டும் தாக்குவான். மத்றவன் பகைவர், நண்பர் எல்லோருக்கும் வேற்றுமையின்றிக் கேடு செய்வான்.

—அடிஸன்

சில சமயங்களில் இழப்பது தான் பெரிய ஆதாயமாயிருக்கும்.

—ஹெர்பெர்ட்

எந்த இனத்தில் இளைஞர்களின் இதயம் எஃகைப் போல உறுதியாக இருக்கிறதோ, அந்த இனத்துக்கு வாள் தேவையில்லை.

—முகமது இக்பால்

தத்துவ ஞானத்தை மேலெழுந்தாற் போலக் கற்ருல், அது சந்தேகங்களை எழுப்பும்; தீர்க்கமாக ஆராய்ந்தால் சந்தேகங்களை நீக்கும்.

—பேக்கன்

கோழையாக வாழ்வதைக் காட்டிலும் போராடிச் சாவது எவ்வளவோ மேல்.

—காந்தியடிகள்

காற்றுள்ள போதே தூற்றிக்கொள். சோம்பல் சிறிதும் உதவாது.

—விவேகாநந்தர்

பயம் என்பது அறியாமையாலும், சலன புத்தியாலும் ஏற்படுகிறது.

—ராபின்ஸன்

நான் பயப்படாதவன் போல் பாவித்ததினுல், படிப்படியாக என்னிடம் இருந்த பயம் ஒழிந்து விட்டது.

—ரூஸ்வெல்ட்

மழைத் தண்ணீர் மேட்டு நிலத்தில் தங்கி நிற்பதில்லே. பள்ளமான இடத்துக்கு ஓடி வந்து விடுகிறது.

அதுபோல, ஈசுவர கிருபையானது தற்பெருமையும், கர்வமுமுள்ளவர்களுடைய உள்ளத்தில் தங்கி நிற்பதில்லே, பணிவுள்ளவர்களின் உள்ளத்தில் தான் தங்கி நிற்கும்.

—ராமகிருஷ்ணர்

மனைவி ஒரு வீணையல்ல. வாசித்து முடிந்த பிறகு அதைச் சுவற்றில் உங்கள் விருப்பப்படி தொங்கவிட முடியாது.

—ரஷ்யப் பழமொழி

அழகு!—அது சில நாளில் சிதைந்து விடும் ஒரு சாம்ராஜ்யம்.

—சாக்ரட்டீஸ்

உண்மையான மனைவி கணவனுடைய இல்லத்தில் அடிமை; இதயத்தில் அரசியாவாள்.

—ரஸ்கின்

பிறருக்குத் துன்ப மின்றியும், நியாய வழி தவருமலும் காலட்சேபம் செய்தல்,

உயிர் போவதாலுைம் தீங்கு செய்யாமை,

கெட்டவர்களைப் பேணுதிருத்தல்,

செல்வமுற்றவன் நண்பனுயினும் அவனை யாசியா திருத்தல்,

கஷ்ட காலத்தில் மிருந்த தைரியம்,

மகான்களுடைய வழி நடத்தல்.

இக் கடுமையான விருதங்களெல்லாம் நல்லோருக்கு யாரால் உபதேசிக்கப் பட்டனவோ?

—பர்த்துருஹரி

உறுதியான உடல் இருந்தால் உறுதியான மனமும் இருக்கும் என்பது சரியல்ல, நேர் மாருனதே உண்மை.

உறுதியான மனம் இருக்குமானுல் உடல் நிலையைக் கூடுமான வரையில் வசதியாக வைத்துக் கொள்ள முடியும்.

—பிளேட்டோ

எவ்வளவுக் கெவ்வளவு நாம் மௌனம் சாதிக்கிருேமோ, அவ்வளவுக் கவ்வளவு நாம் சந்தோஷமாக இருப்போம் என்பது உறுதி.

—ராஜாஜி

அவரவர்களுக்கு ஏற்றவாறு, கல்வியை நாடு எங்கும் பரவச் செய்வதே தர்மமாகும்.

—கன்பூஷியஸ்

வாழ்க்கை என்பது ஓர் ஏணி.

நாம் எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியும் மேலேயோ அல்லது கீழேயோ கொண்டு செல்கிறது.

—ரோகர் பாப்சன்

இரவில், நட்சத்திரத்தின் மங்கிய ஒளியில், தனிமையில் நான் புதுமையான ஓர் உலகின் பாஷையைக் கற்கின்றேன்.

—பைரன்

நம்முடைய முன்னோர்களின் பெருமைகளை எண்ணிப்பார்த்து அனுபவிக்க முடியாத சந்ததியார்கள், வருங்காலத்தில் எண்ணிப்பார்த்து இன்புறும் வருங்கால சந்ததியார்களையும் அடைய மாட்டார்கள்.

—லார்டு மெக்காலே

சாஸ்திரங்களைக் கற்ற பிறகும் ஒருவன் முட்டாளாக இருக்கக் கூடும். அவற்றின் படி நடப்பவனே அறிஞன்.

நோயுற்றவன் அதைப் போக்கும் மருந்தைச் சிந்திப்பதாலேயே அது அவனுக்கு ஆரோக்கியத்தைக் கொடுத்து விடாது.

—பஞ்ச தந்திரம்

தாயின் இதயம்தான் குழந்தையின் பள்ளிக் கூடம்.

—பீச்சர்

உன்னைப் பற்றி உலகம் என்ன நினைக்கிறது, என்ன சொல்கிறது என்று கவலைப்படாதே. ஏனென்றால் அது சரியாக நிதானிக்கும் நீதிபதியல்ல.

உன் மனச்சாட்சியே உலகைப் பார்க்கிலும் பெரியது, உண்மையானதும், சரியானதுமான நீதிபதி.

—மெக்கவென்

அகங்காரம் இருக்கும் வரையில் ஞானமும் முக்தியும் கைகூடா. பிறப்பு இறப்பும் நீங்கா.

—ராமகிருஷ்ணர்

அறிவை அடைவதற்கு ஒரே வழி, "தெரியாது" என்று உணர்வதே யாகும்.

—டிஸ்ரலி

நண்பனுக்குக் கடனைக்கொடுத்து விட்டு, திரும்பக் கேட்கும்போது எதிராளியாய் இருப்பான்.

அழுத்திக் கேட்டால் பணம் போய்விடும் அல்லது நண்பன் மாறிவிடுவான்.

—பிளாட்டஸ்

உண்மையான வீரத்தனம் பிறரைக் கீழே வீழ்த்தி விடுவதில் அல்ல, கோபம் வரும் சமயம் அதனை அடக்கிக் கொள்ளுதலேயாகும்.

—நபிகள் நாயகம்

ஒரு பெண் பேசும்போது நீயும் பேசாதே. புன் சிரிப்பு போதும்.

—சீன அறிஞர் லியூ-கின்

முகஸ்துதி என்றால் என்ன? ஒருவன் தன்னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருக்கிறானோ, அதையே அவனிடம் சொல்லுவது தான்.

—எவர்ஹார்ட்

நீதிமன்றம் ஒரு எலிப் பொறியைப் போன்றது. உள்ளே நுழைவது சுலபம்; ஆனால் வெளியே வருவது கஷ்டம்.

—பால்பர்

நீரைப் பிரித்துப் பாலையுண்ணும் வித்தை அன்னப் பட்சிக்கல்லாமல் வேறொன்றுக்குத் தெரியுமோ— தெரியாதல்லவா?

அது போலவே கர்த்தாவாகிய ஈசனையும் காரியமாகிய பிரபஞ்சத்தையும் ஞானிகள் விவேகித்தறிவார்களே யன்றி, அஞ்ஞானிகள் அறிய மாட்டார்கள்.

—கவி வேமண்ணா

ஒருவனுடைய பேச்சும் செயலும் ஒன்றுபோல் இருக்க வேண்டும்.

அப்பொழுது தான் அவன் சமுதாயத்தில் சேர்ந்து வாழமுடியும்.

—ருஸோ

பணம் தொல்லைகளின் எதிரி; நிறையப்பணம் இருந்தால், அதுவே தொல்லைகளின் தாய்.

—சீன ஞானி

பிறப்பும் இறப்பும் விதிப்படி வருவன.
கடவுளும் அதில் தலையிட முடியாது.

—ஜப்பானியப் பிரார்த்தனை

பாக்தாத் நகரில் ஒருவர் தன் பெண்ணைச் சக்கிலியனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்திருந்தார். சக்கிலியன் பெண்ணின் உதட்டை நன்ருகக் கடித்து விட்டான். ரத்தமும் பெருகிற்று.

இதைக் கண்ட தகப்பனுர் மாப்பிள்ளையிடம் வந்து சொல்லுவார், ''நீசனே! தோலினுல் செய்யப்பட்டதா என்ன அவளுடைய உதடு? அவ்வளவு கடினமாகக் கடித்து விட்டாயே, உன் பல்லின் உறுதியே உறுதி, நான் விளையாடவில்லை, காரியத்தில் விளையாடாதே. உன் தொழிலைச் செய். அதைக்கொண்டு களிக்காதே. தொட்டில் பழக்கம் சுடுகாடு வரையிலும்''

—ஸா அதி

புலன்களின் சாம்ராஜ்யத்தில் வாழ்பவன், துன்பத்தின் சாம்ராஜ்யத்தில் மடிகிருன்.

—பாக்ஸ்டர்

அளவு கடந்த துக்கம் சிரிக்கும்; அளவு கடந்த உற்சாகம் அழும்.

—வில்லியம் ப்ளேக்

அதிகாரம்—அது ஒரு தொற்று நோய். அதன் கைப்பட்ட தெல்லாம் கருகிச் சாம்பராகிவிடும்.

—ஷெல்லி

நமக்குத் தாய் தந்தையர் வாய்ப்பது விதி.
நண்பர்கள் வாய்ப்பதோ மதி.

—ஷெல்லி

குணம் இல்லாதவளுடைய அழகு வீண்.

—சம்ஸ்கிருதப் பழமொழி






"எல்லோருடைய முன்னேற்றத்திலும் நம்முடைய முன்னேற்றம் இருக்கிறது" என்ற கொள்கை இல்லாதவன் வாழ்க்கையின் எந்தத் துறையிலும் நிலைக்க முடியாது.

—வல்லபாய் படேல்

ஆண்களைவிடப் பெண்கள் புத்திசாலிகள். ஏனெனில் அவர்களுக்குத் தெரிந்த விஷயங்கள் குறைவு.

ஆனால் அதிகமாகக் கிரகித்துக் கொள்வார்கள்.

—ஜேம்ஸ் ஸ்டீபென்ஸ்

நான் எங்கே போனால் என்ன? என் உள்ளத்திலிருக்கும் தெய்வம் என்னைவிட்டு நீங்காது.

அந்தத் துணையைக் கொண்டு என் தருமத்தின்படி நான் நடந்து கொண்டேனானால், என் உள்ளத்தில் சாந்த சித்தம் நிலைக்கும்.

இவ்வாறிருக்க, ஏதேனும் ஒரு விபத்து நேர்ந்தவுடனே உள்ளம் கலங்கி, இயற்கை மாறி, நடுநடுங்கி, அலைந்து பயந்து, ஏங்கிக் கையை நீட்டுவது தகைமையாகுமா?

மனநிலையைக் காப்பதற்கு மேல் எந்தப் பொருள் உளது?

—மார்கஸ் ஔரேலியஸ்

---

Edited, Printed and Published by A. K. CHETTIAR, at Kumari Malar Press, 100, Mowbrays Road, Madras-600018.

# ஒரு 90-வினாடிக் கண்ணோட்டம்-
# டிவிஎஸ் அளிக்கும் முழுமையான சேவை



டிவிஎஸ் ஒரு புதிய டிரக்கை உங்களுக்கு விற்பனை செய்கிறது.

அதன் முதலீட்டில் 70 சதவிகிதம் அல்லது அதற்கு மேலும் பெற வழி செய்கிறது.



அதன் பாடியைக் கட்டித் தருகிறது.



அதற்கான பராமரிப்பு சேவையை அளிக்கிறது



டயர்களை ரீட்ரெட் செய்கிறது.






உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ

அசல் மாற்றுப் பகுதிகள் பல டிவிஎஸ் அலுவலகங்களிலும், ஏராளமான விற்பனை/பணி நிலையங்களிலும் கிடைக்கின்றன.

டி.வி. சுந்தரம் அய்யங்கார் அண்ட் சன்ஸ் பிரைவேட் லிமிடெட், மதுரை

SAA/TVS/1036

மனிதர்களுடன் மட்டுமின்றி, தரையில் ஊர்ந்து செல்லும் பிராணிகள் உள்பட எல்லா உயிர்களுடனும் சகோதர உணர்வை வைத்துக் கொண்டு, இவற்றில் ஒன்றாக வாழவே நான் விரும்புகிறேன்.

நாம் அனைவரும் ஒத்த குறைகளை உடையவர்கள். ஒரே ஆண்டவனின் குழந்தைகள். ஆதலால் நம்முள் எல்லையற்ற தெய்வீக ஆற்றல் இருக்கிறது.

ஒரு மனிதனை ஏளனம் செய்வது இந்த தெய்வீக ஆற்றலை ஏளனம் செய்வதற்கு ஒப்பாகும். உண்மையில், அந்த மனிதனுடன் உலகத்திற்கே தீங்கு செய்வதற்கு ஒப்பாகும்.

—காந்தியடிகள்

